கழக வெளியீடு-௧௮௰

ஓம்

# புகழேந்தி

ஒரு

செந்தமிழ் நாடகம்


ஆசிரியர்.

தமிழ்ப்புலவர் அ. நடராச பிள்ளை.



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை.

யுவ-கார்த்திகை

# முகவுரை

அமிழ்தினுமினிய நந்தமிழ்மொழி இயல், இசை, நாடகம் என முப்பெரும்பிரிவுகளைக் கொண்டதாகும். அப்பிரிவுகளுள், இயற்றமிழானது பொதுவாக மக்களிடை வழங்கும் உலகவழக்குச் சொற்களும், ~~அறிவாளிகள் மேற்கொண்டு ஒழுகும்~~ செய்யுள்வழக்குச் சொற்களுமாம் அவ்விரு வழக்கினைத் தழுவியே சங்க நூல்களும், பிற ~~[illegible]~~ நூல்களும், தொல்காப்பிய முதலிய இலக்கண நூல்களும் எழுலாயின இசைத்தமிழானது மக்கள் மகிழ்ச்சிமிக்க காலத்தே செவிகட் கினிமையாயப் பாடிக் கொண்டாடுதற்குரிய வகையாகும்.

இனி, நாடகத்தமிழானது முற்கூறிய இருவகைத்தமிழும் விரவப் பெற்று, முன்னிகழ்ந்த செயதியொன்றினைத் தெளிவாகக் காண்பார்க்கு விளக்கிச்செல்லும் முறையில் அமைந்த நூற்களைக் கொண்டதாகும் இது மேற்கண்ட இருவகைத்தமிழினும் பெரிதும் ஏற்றமுடைத்து! என்னை? இயற்றமிழ் மனமொன்றற்கும், இசைத்தமிழ் மனம் செவி என்ற இரண்டற்குமட்டுமே உணவாய இன்பந்தர வல்லனவாக, நாடகத்தமிழ் மனம், செவி, கண் என்ற மூன்றற்கும் உகந்த நல்லுணவாய் இன்பம் அளிக்க வல்லதாகலின். மேலும், இந்நாடகம் காண்பார்க்கு உள்ளக்கிளர்ச்சியினையும், உடற்கிளர்ச்சியினையும் உண்டாக்குவதோடு ஆடுவோர்க்கும் உள்ளக்கிளர்ச்சி உடனல முதலியவற்றைக் கொடுக்குமென்பது உடற்கூற்றினை யுணர்ந்தார் துணிபாம் ஆகலின், இந்நாடகத்தமிழ் அக்காலத் தமிழ்மக்களாற் கண்ணெனப் போற்றப் பெறுவதாயிற்று.

நாடகமாவது தம்மாற் காணப்பட்டோ, கேட்கப்பட்டோ அமைந்த வரலாற்றினை எடுத்துக்கொண்டு இனிதாகப் பாடியாடிக் காட்டுவதாம் இஃது அக்காலத்துக் குதித்து ஆடிப்பாடி விளக்கப் பட்டதாகலின், கூத்து எனவும் பெயர்பெற்றது இந்நாடகம் மக்களுக்கு இன்றியமையாத உடற்பயிற்சியினைக் கொடுக்கும் பந்தாட்டம் முதலியனபோற் பயன்றருமொன்றாகலின், இதற்கு ஆட்டம் என மற்றொருபெயரும் வழங்கலாயிற்று இத்துணைச் சிறப்புவாய்ந்த நாடகத்தமிழும், இதற்குக் கண்போன்ற இசைத்தமிழும் பண்டைத் தமிழ்மக்களாற் பெரிதும் போற்றப்பட்டுப் பல நூல்களைக்கொண்டு திகழ்ந்தன என்பது சிலப்பதிகாரமாகிய இயற்றமிழ் நூலிற் காணப்

படும சில பகுதிகளாலும், அவற்றின உரைகளாலும நன்கு தெளிய லாம

இடையே கி பி இரண்டாவது நூற்ருண்டில தமிழநாடு புகுநத சமண, புதத சமயப்போககுகளால இசைததமிழும, நாடகததமிழும தமிழமககளால ஒதுககப்பட டொழிநதன அதனல, தமிழமககள் இசையின அருமையினையும, நாடக எற்றததினையு முணரா ஏழைகள் என்ற இழிப்புரைககு இலககாயினா

அவவிழிப்புரையினை எடுததொழிப்பானவேணடிச சற்றேறக குறைய நாற்பதாண்டுகட்கு முன உயா திருவாளா, ராய்பகதூர். P. சுந்தரம் பிள்ளையவாகள, எம ஏ 'மனேன்மணீயம்' என்ற அரிய நாடகநூலை இயற்றி வெளியிட்டாாகள் அது தமிழமக்களின தலைமணியாயச சிறநது விளஙகாநின்றது அதனைப் பினபற்றிச சிலா சில நாட்கநூற்களை வெளியிட்டனராயினும், அவை தமிழ மக்கட்கு நாடக இலககியஙகளாகப் பயன பெருவாயினறன

நாடகததமிழாற பூலவகையானும சிறப்புறறிருநத நநதமிழத் தாய் நாடகவிலககியஙகட்கு எடுததுககாட்டாக மனேனமணிய மொனறனையே கொண்டு எளிமையுற்றுக காணப்படுவது தமிழ மகளுகிய எவனுககும் இழிவனறோ? ஆகலின், அறிவிலும ஆணடி லும எளியோகிய யான அமமனேனமணிய நாடகநூற் போககினை மேற்கொணடு மறறொரு நாடகநூல இயறற முனவநதனன தமி ழனனையின சிறப்புகளையும, தமிழப் புலவாகளின மாணபினையும, தமிழமொழியின தனமையினையும பலலாறருன விளககவேணடித தமிழப்புலவாகளிற றனிச சிறப்புறற புகழேநதியின் வரலாறு எடுத துக கொள்ளப்பட்டது

இநநாடகம் மனேனமணிய நாடகநூற் போககினபடி செயயப் பட்டிருததலின, இதனுள் அடஙகிய வரலாறு ஆஙகாஙகு நடா தேறும மொழியாடல்களாலும், அவா யஙிலை முதலிய குறிப்புக களாலும அறிநதுகொளளவேணடியநிலையில அமைககப்பட்டுளது. ஆகலின, வரலாற்றுசசுருககம ஒனறு இதனகண சோககப் பட்டுளது கறபாாககுப பொருளும, கருத்தும புலப்படுவான் வேணடி இறுதியில அருமபொருள விளககமும அமைககப்பட்டுளது

வயிறறுப் பிழைபபாகிய தொழிலிடையிலும், பிணி கவலை முதலிய தொலலைகளின நடுவிலும எனனை இப்பணியிற றாணடி விட்ட திருவருளை மனமார வழுததுகினறனன இதனை வெளியிட முனவந்து உதவிய தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தார்க்கு எனது நனறி எனறும் உரியதாகுக

ஆககியோன

# பொருளடக்கம்

# வரலாற்றுச் சுருக்கம்

தமிழ்நாடுகளில், தொண்டைநாடு சான்றோர்கள் பலரையும் பெற்றெடுத்த, தனிச்சிறப்புடையது அதன்கண், கி பி. பன்னிரண்டாம நூற்றாண்டில், பொற்களத்தூர் என்ற பதியினில், வேளாளமரபினிலே புகழேந்தி என்ற பெரியாரொருவர் தோன்றினார் அவர் இளமையிலேயே, சென்ற பிறவிகளிற் கற்ற கல்வியின்பயனாய்த் தமிழ் கற்பிக்கப்படுபவர்களில், ஊக்கமிக்கவரியாக் காணப்பட்டார் பின்பு, அவர் தமிழகத்திலேயிற் சிறந்த செல்வராய் விளங்கினார். அவர்க்குத் தமிழன்னைபால் பேரன்பு மிகுந்து காணப்பட்டது அதனால், அவர் தமிழன்னையின் பிறப்பிடமாகிய பாண்டிநாடடைந்து, பாண்டியன் அரண்மனைப்புலவராய

அக்காலத்தே பாண்டிநாட்டின்கண் அரசனாய் விளங்கியவன் பராக்கிரம பாண்டியனாவன் அவன் புகழேந்தியார் தம் புலமையை வியந்து, அவரைத் தனது கண்மணிபோற் போற்றினான். அவரும் அவனுக்கு உற்றுழித்துணையாயப் பல அரசியல் அலுவல்களை முடித்துக்கொடுத்துச் சிறந்த அமைச்சராய் விளங்கினார் அவர் ஒருசமயம் இலங்கையரசனாகிய பராக்கிரமபாகு என்பானிடம் தூதுசென்று, அவனுதவியால் பாண்டியநாடு சோழர்கள்பால் சேராமற் காப்பாற்றினார்

பராக்கிரமபாண்டியனுக்குக் கற்பகவல்லி என்றொரு மகளிருந்தாள். அவளுக்குச் செந்தாமரையாள், வெண்டாமரையாள் என்றிரு பாங்கிகள் இருந்தனர் அம் மூவர்க்கும் இளம்பருவத்தில் பாண்டியன் விருப்பப்படி, புகழேந்தியால் தமிழ் கற்பிக்கப்பட்டது. அம் மூவரும் மங்கைப்பருவ முற்றனர் பராக்கிரமன் தன் மகட்கு மணமுடிக்க வேண்டியவனாய்ப் பல நாட்டு மன்னர்களின் திருவுருவப்படங்களை வரவழைத்துத் தன்மகள்பால் அனுப்பினான். அவள், அவ்வுருவங்களில், சோணாட்டு மன்னனாகிய குமாரகுலோத்துங்கனின் வடிவத்தைக் கண்டு காதல்கொண்டாள் ஆயினும்,

நாண மிகுதியால் அதனை வெளியிட அவள் பின் வாங்கினாள். இதனையறிந்த அவள் உயிர்ப்பாங்கியாகிய வெண்டாமரையாள் கூனி என்ற கிழவியைச் சோணாட்டுக்குத் தூதாக எவர்க்குந் தெரியாமல் அனுப்பினாள். அவள் கற்பகவல்லியின் திருவுரு வப்படத்தோடு சோணாடு சென்று, குலோத்துங்கனுக்குக் கற்பகவல்லியின் காதலையும் பேரழகையுந் தெரிவித்தாள்.

விக்கிரமசோழன் மகனாகிய குமாரகுலோத்துங்கன் தன் தந்தையின் அவைக்களப் புலவராகிய ஒட்டக்கூத்தப் புலவர்பால் தமிழறிவுபெற்றுப் புவிக்கும், கவிக்கும் அரச னாய்ப் பொருந்தினான். பராக்கிரமன்மகளாகிய கற்பகவல்லி யின் கட்டழகும், கல்விச்சிறப்பும் அவனால், முன்பே அறியப் பட்டிருந்தன. கூனியின் வாய்மொழியால், கற்பகவல்லியின் காதலையுணர்ந்த குலோத்துங்கன் தன் ஆசிரியராகிய ஒட்டக் கூத்தரை மணம்பேசி வரும்படி பாண்டியநாட்டிற்கு அனுப் பினன். பாண்டியன் அவையில், ஒட்டக்கூத்தர்க்கும், புக ழேந்திக்கும் விருப்பான மொழியாடல் நேர்ந்தது. அதில், ஒட்டக்கூத்தர் சிறிது தோல்வியுற்றார். பாண்டியன் ~~இடை யிற்புகுந்து~~ அவ்விருவரையும் தணிவித்தான். பின்பு, கற்பக வல்லிக்கும் குலோத்துங்கனுக்கும் மணம் உறுதி செய்யப்பட் டது. ஒட்டக்கூத்தர் மணவோலை பெற்றுச்சென்றார். மண வோலைகண்டு மகிழ்ந்த குலோத்துங்கன் ஒட்டக்கூத்தரைச் சோணாட்டுக்கு அரசப்பிரதிநிதியாய் அமைத்துவிட்டுப் பரி வாரங்களுடன் பாண்டியநாடு சேர்ந்தான். பராக்கிரமன் தன் மகளாகிய கற்பகவல்லிக்கும், குலோத்துங்கனுக்கும் மிகச் சிறப்புடன் மணஞ்செய்வித்தான். அந்த மணத்தினை யடுத்து, கற்பகவல்லியின் பாங்கியாகிய செந்தாமரையாட்கும், பாண்டி யன் அரண்மனை விகடனாகிய வெல்வாயனுக்கும் திருமணஞ் சிறப்பாக நடந்தது. பாண்டியன் தன்மகளாகிய கற்பகவல் லிக்குச் சீதனமாகப் பொருள்கள் பலவற்றைச் சோணாட்டுக்கு அனுப்புவித்தான். அவற்றுடன் கற்பகவல்லிக்கு நல்லறிவு புகட்டவேண்டிப் புகழேந்தியாரும் சோணாட்டுக்கு அனுப்பப் பட்டார். பாண்டிநாட்டில் குலோத்துங்கனுக்கு ஆறுதிங் கள் முடிய மணவிருந்துகள் பல பற்பலவிடங்களில் நடத்தப் பட்டன.

சீதனப்பொருள்களோடு புகழேந்தியார் சோணாடு சேர்ந்தார். அங்கு, அரசப்பிரதிநிதியாயிருந்த ஒட்டக்கூத்தர் பழம்பகை காரணமாக அவரைச் சிறையிட்டார். பாண்டிநாட்டிலிருந்து புகழேந்தியாரை அழைத்துவந்த சோணாட்டரண்மனையமைச்சன் மணிவண்ணன் உதவியால், அவர் சிறைச்சாலையில் துன்பம் யாதுமின்றியிருந்தார். அங்கு ஒட்டக்கூத்தரால் சிறையுற்றிருந்த அம்பட்டன்முதலிய எழுவர்க்கும் அவர் தமிழறிவு கொளுத்தி அவர்களைச் சிறந்த தமிழ்ப்புலவராக்கினார்.

குலோத்துங்கன் பாண்டிநாட்டில் ஆறுதிங்கள்வரை மணவிருந்துண்டு மகிழ்ந்து சோணாடு திரும்பினான். அவனோடு மணமகளாகிய கற்பகவல்லியும், அவள் உயிர்ப்பாங்கியாகிய வெண்டாமரையாளும் புறப்பட்டு வந்துசேர்ந்தனர். அன்று, சோணாட்டின் தலைநகராகிய உறையூரில் குலோத்துங்கன் யானைமீதேறி ஊர்வலம்வந்தான். புகழேந்தி தன்னுடைய மாணவர்களோடு சிறைக்கூடத்தின் மேற்றளத்திலிருந்து ஊர்வலக்காட்சியைக் கண்டு நின்றார். அப்பொழுது புகழேந்தியாரைக்கண்ட குலோத்துங்கன் பக்கலில் வந்துகொண்டிருந்த ஒட்டக்கூத்தரால் வினவிய வினாவொன்றால், ஒட்டக்கூத்தர்க்கும், புகழேந்தியார்க்கும் மொழியாடல் ஒன்று நேர்ந்தது. அதிலும் புகழேந்தி வெற்றியுற்றார். முன்னிகழ்ச்சிகளில் எதனையும் அறியப்பெறாத குலோத்துங்கன் அவர்கள் சினத்தைத் தணிவித்து மேலே சென்றான். அவன் அன்று நிகழ்த்திய அரசவையில் மணிவண்ணன்முதலியோரின் வாய்மொழிகளாற் சிறையிடப்பட்ட அம்பட்டன்முதலிய எழுவரும் அழைக்கப்பட்டனர். ஒட்டக்கூத்தர் அவர்களை விருப்பான சில வினாக்களால் மிரட்டினார். அவர்கள் அவர் வினாக்களுக்கு அஞ்சாது தக்கவிடைகள் பகர்ந்து அவரை அவமானப்படுத்தினார்கள்.

கல்வி கற்குங்காலத்திலேயே புகழேந்தியார்பாற் காதல் கொண்டிருந்த வெண்டாமரையாள் அவரை மணக்கவேண்டியே கற்பகவல்லியைத் தொடர்ந்து சோணாட்டுக்கு வந்திருந்தாள். அவள் வந்ததுமுதல் புகழேந்தியாரின் செய்தியொன்றுந் தெரியாது வருந்தினாள். அதனால், அவள் கற்பக

வல்லியைத் தூண்டிவிட்டுப் புகழேந்தியாரின்நிலையை அறிய லானாள் கற்பகவல்லி மணிவண்ணனால், புகழேந்தியின் சிறை யிருக்கையை யறிந்து சினந்தாள் அவள் சிறைக்குக் காரணமான ஒட்டக்கூத்தரை அவமானப்படுத்தவும், புகழேந்தியாரைச் சிறைமீட்டவும் விரும்பினாள் அதற்குதவியாக மணிவண்ணன் வெண்டாமரைமுதலியோர் நின்றனர் கற்பகவல்லி அன்றிரவு படுக்கையறையினை யடைந்து ஊடல்செய்து ஒட்டக் கூத்தரை அவமானப் படுத்தினாள். புகழேந்தியார் சிறைவீடு பெற்றார் வெண்டாமரையாள் பேரிற் சிலநாளாக ஆசை கொண்டுதிரியும் மணிவண்ணன் அவள் புகழேந்தியார்பாற் காதல் கொண்டுள்ளதை யறிந்து, வஞ்சக மொழிகளால் புக ழேந்தியாரை அச்சுறுத்தி அரண்மனையைவிட்டு அகற்றினான் புகழேந்தியார் மறைவால் வெண்டாமரை மெலியலானாள்.

மணிவண்ணன்பால் நெடுநாளாய்க் காதல்கொண்டொழு கிக் கற்பிழந்துநின்ற சேங்கமலம் என்ற சோணாட்டரண் மனைப் பணிப்பெண் வெண்டாமரைக் குதவியாயநின்று மணி வண்ணன் வஞ்சனைகளை எடுத்து விளம்பினாள் வெண்டா மரையாள் செங்கமலத்தின் உதவியால் உழுவலன் எனப் பெயர்கொண்ட ஆண்வடிவங்கொண்டு, புகழேந்தியாரைத் தேடிப்புறப்பட்டாள். அரண்மனைவிட் டகன்ற புகழேந்தி யார் நடுக்காட்டில் வேட்டையாடவந்திருந்த மளுவநாட்டு மன்னன் சந்திரன்சுவர்க்கியாற் போற்றப்பெற்று, முரணை நகரில் அவனுடைய அவைக்களப்புலவராய் விளங்கினார்.

உழுவலன் வடிவுகொண்டுசென்ற வெண்டாமரையாள் புகழேந்தியாரை முரணைநகர்க்கடுத்த காட்டிற் கண்டு, அவ ரால் முரணைநகர்க் கழைத்துப்போகப்பட்டாள் அங்கு அவள் அவர்க்கு இதமுறநடந்து இயற்றமிழ் மாணவனாகச் சென் றாள் இருந்துவந்தாள் அக்காலத்தே சந்திரன்சுவர்க்கியின் வேண்டுகோளின்வண்ணம் புகழேந்தியாரால் நளவெண்பா என்ற நூல் இயற்றப்பட்டது

கற்பகவல்லி உறையூரிற் புலவரையும் உயிர்ப்பாங்கியையு மிழந்து துன்புற்றுக்கொண்டிருந்தாள் அவளுக்கு முரணை நகரிலிருந்து வெண்டாமரையாளால் எழுதப்பட்ட திருமு

ஒன்று வந்துசேர்ந்தது அதனால், மணிவண்ணன் வஞ்சகச் செயல்கள் அரசனுக்கும் அரசிக்கும் புலனாயின. ஆகவே குலோத்துங்கன் புகழேந்தியாரையும் மளுவநாட்டுமன்னன் முதலிய பல அரசர்களையும் வரவழைத்து நளவெண்பா நூலைத் தனது அவையில் அரங்கேற்றுவித்தான் வெண்டா மரையாளும், புகழேந்தியாரும் ஒருவரை ஒருவர் அறிந்து மணந்துகொண்டனர்

# காட்சியிற் கழறிய பொருள்கள்

அங்—கா.

1. 1. ஒட்டக்கூத்தர் மணம் பேசிவரல், புகழேந்திக்கும் ஒட்டக்கூத்தர்க்கும் வீரூப்பான மொழியாடல்.
   2. அம்மனை யாட்டம்.
   3. பந்தாட்டம், குறிகூறல், சோதிடநூலின் றன்மை.
   4. கைக்கிளை, தமிழ்மொழியாராய்ச்சி, தடாதகைத்திருமணம்.

2. 1. காலைக்காட்சி, ஞாயிறு மதிகளின் போக்குகள்.
   2. ஒட்டக்கூத்தர் கொலுநடத்தல், போலிப்புலவர்கள் சிறைப்படல்.
   3. சிறையில் புகழேந்தியும், போலிப்புலவர்களும் உரையாடல்.
   4. மணிவண்ணனும், புகழேந்தியும் உரையாடல்.
   5. புகழேந்தி போலிப்புலவர்களுக்குப் புகட்டிய ஒருநாட்பாடம், யாப்பியல் - செய்யுள் இயற்றும்வழி, மொழிச்சிறப்பு—அகப்பொருட் சிறப்பு, காதலியின் சிறப்பு.

3. 1. உறையூர்த் தெருவின் சிறப்பு, குலோத்துங்கன் உலா, யாழ்ப்பாணர் வாழ்த்து, புகழேந்திக்கும் கூத்தர்க்கும் சொற்போர்.
   2. குலோத்துங்கன் கொலுநடத்தல், போலிப்புலவர் பாப்புலிகளாகப் பாய்தல்.
   3. கற்பகவல்லி கூத்தரை அவமானப்படுத்த மேற்கொண்ட ஏற்பாடுகள்
   4. கற்பகவல்லி ஊடல், கூத்தர் அவமானப்படல், புகழேந்தி சிறைவீடு, ஊசல்வரி
   5. ஞாயிற்றின் தோற்றச் சிறப்பு, வெண்டாமரை செங்கமலம் இருவரின் மொழியாடல், மணிவண்ணன் காமமும் மறுதளிப்பும், செங்கமலத்தின் திகைக்கற்றநிலை

4. 1. புகழேந்தியின் தனிமை, உலகப்போக்கின் கொடுமை, புகழேந்தி சந்திரன்சுவர்க்கியினை எதிர்ப்பட்டுச்சார்தல்.
   2. வெண்டாமரை தன் காதற்றுயரினைச் செங்கமலத்தினிடம் விரித்துக் கூறல் வெண்டாமரை சோழன் அரண்மனைவிட்டு வெளியேற முடிவுகட்டல்.

3 சந்திரன்சுவாக்கி கொலுநடத்தல், செந்தமிழ்ச்செல்வியின் சிறப்பு, நளவெண்பா இயற்றும் ஏற்பாடு

4. வைகறைச் சிறப்பு, புகழேந்தி உழுவலனை எதிர்ப்படல், உழுவலன வரலாறு.

5. கற்பகவல்லியும் செங்கமலமும் உரையாடல், கற்பகவல்லி வெண்டாமரையின் வெளியேற்றத்தின் உண்மை யுணர்ந்து அவளைத் தேடிக்கொணர விரும்பல்.

5. 1. உழுவலனும் புகழேந்தியும் உரையாடல், உழுவலன் சோணாட்டுக்கு நிருபம் அனுப்பத் தீர்மானித்தல்.

2 கற்பகவல்லி வெண்டாமரையாளை எண்ணித் துன்புறல், குலோத்துங்கன் உழுவலன் நிருபத்தைக் கொண்டு வந்து கற்பகவல்லியிடஞ் சோதித்தல், கற்பகவல்லி மகிழ்ச்சியுறல்.

3. நளவெண்பாவின் சொற்பொழிவு, கூத்தரும் புகழேந்தியும் நண்புற்று மகிழல.

4 புகழேந்தியும் உழுவலனும் உரையாடல், உழுவலனே வெண்டாமரையாதல், புகழேந்தியும் வெண்டாமரையும் மணம்புணர்ந்தின்புறல

# நடர்களின் விளக்கம்

| | |
|---|---|
| பராக்கிரம பாண்டியன் | பாணடி நாடடு மனனன |
| குலோத்துங்கன் | சோணாடடு மனனன் |
| சந்திரன் சுவாக்கி : | மளளுவநாடடுச சிறறரசன் |
| புகழேந்தி | பாணடியனரணமனைப புலவா |
| ஒட்டக்கூத்தர் . | சோழனரணமனைப புலவா. |
| கம்பர் : | சோணாடடுப புலவா |
| வெல்வாயன் · | பாணடியனரணமனை விகடன |
| நகைமொழிநாவலன் | சோழனரணமனை விகடன |
| மகிழ்மொழிவலவன் | சுவாககியூரணமனை விகடன |
| வேலையா | சோணாட்டமைசசர் |
| மணிவண்ணன் | சோழனரணமனை யமைசசன |
| நற்சொல் நாவலன் · | மளளுவநாட டமைசசன |
| மாயவன் : | மளளுவநாட்டுப படைததலைவன |
| வீரத்தேவன் | சோழனரணமனைச சேவகன |
| மூககன் : | சோழனரணமனை அநதபபுரஏவலன் |
| நல்லமுத்து : | சோணாட்டொறறா தலைவன் |
| அறப்பெருஞ் செல்வன் · | சோணாட்டுசசிறைககாவலா தலைவன். |
| ஆறுமுகவேளான் | சோணாடடுக குயவன |
| பெருமாள்பிள்ளை · | சோணாடடு வேளாளன |
| அங்கணாசாரி | சோணாட்டுத தடடான |
| வேளையணாசாரி | சோணாடடுத தசசன |
| கருப்பணாசாரி ! | சோணாடடுக கொலலன |
| கண்ணன் : | சோணாட்டு நாவிதன. |
| நல்லான் | சோணாடடு வணணான |
| கற்பகவல்லி | பராககிரமன மகள |
| வெண்டாமரை · | கற்பகவலலியின உயிர்பபாஙகி |
| செந்தாமரை : | கறபகவலலியின தோழி |
| செங்கமலம் · | சோழனரணமனைப பணிபபெண |
| உழவலன் . | வெணடாமரையின் வேறறு வடிவம. தோழிகள், குறததி, படைததலைவா, படைவீரா, அமைசசர், யாழ்பபாணா முதலியோா. |

நிகழ்விடம் : கொற்கை, உறையூா, முரணை.

ஓம்

கடவுள் துணை.

# புகழேந்தி

## (ஒரு செந்தமிழ் நாடகம்)

---

### பாயிரம்

#### ஆசிரிய வணக்கம்

(நேரிசை வெண்பா)

தமிழை முழுதுணர்ந்த தந்தகந்த சாமி
அமிழ்தே! உனைப்பணிய வல்லிற்—றிமிரம்
கடிந்தோடச் செய்வினைகள் காட்சியுறச் செய்வாய்
படிந்தென்றன் நெஞ்சகத்தின் பால்.

#### தமிழ்த்தாய் வணக்கம்

(நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா)

(இது நான்கடித் தரவு)

எழிலாரும் பாரதமா இளங்கொடியின் றிகழ்முகமாம்
பொழிலாருந் தெக்கணத்திற் பொலிந்திடுமைம் மொழிகளுமே
புலனாரு மைம்பொறியாம், புகன்றவற்றுள் கண்களைப்போல்
வலனாரு மெண்ணெழுத்தாய் வதிந்திடுமென் றமிழ்த்தாயே!

(இவை மூன்றுந் தாழிசைகள்)

திருக்குறளின் கருத்தினையே தெரிந்தவர்கள் தமிழ்மொழியில்
விருத்திமறை யிலையெனவே விளம்பிடமுன் வருவாரோ? (க)

அகப்பொருளும் புறப்பொருளு மமைந்ததோ ரிலக்கணத்தைச்
சகத்தினிலே யெம்மொழியுந் தான்காணா இதுவியப்பே! (உ)

இலக்கியஙக ளினபழமை யெழிலாதி குறையாமல
இலககியதோல் காபபியத்தின் வீறெனனல விளமபவறறோ?(௩)

(தனிசசொல)

எனவாஙகு,

(ஆசிரியச் சுரிதகம்)

சிறபுகழந தேதது நெறியுடைச சிறியேன
பறபல ருனககுப பழநதொணடு பூணடே
ஆராயசசி செய்ய வறிந்தவென னாசை
பேராசை யாகப பிடாபிடித துநத
௫. அடியேன் கடமையா யமைததவிந நாடகம
படியினின மிகவும பருப்பொருட் டாயினும
பைநதமிழ்ப பாவாய ! பாரததருள
மைநதனின் தேடடென மனததிடைக கொண்டே.

## அவையஞ்சின நெஞ்சோடு கிளத்தல்

(நேரிசை வெணபா)

புகழேநதி நாடகததிற் புககிருதத லானீ
இகழேநது மெனறிரஙகாய நெஞசே!—அகழேநது
நீககடலை பூாககுருவி நீதமுற வேவெனற
தாககுந தெரிநதலல வா ?

பாயிரம் முற்றும்

# முதல் அங்கம்

## முதற் காட்சி

இடம் : பாண்டியன் கொலு மண்டபம்.

காலம் : முற்பகல்.

நடர் : பராக்கிரம பாண்டியன், புகழேந்தி, ஒட்டக்கூத்தர், வேலவாயன் முதலோர்.

(பாண்டியன் முதலியோர் கொலுவிருக்க)

(நிலைமண்டில ஆசிரியப்பா)

ஒட்டக்கூத்தர் :

ஏமிகும் பராக்ரம வியலார் வேந்தே!
பாரமிசை நின்னவை பல்குக வூழி!
வந்தவென் வினையினைச் சிந்தையிற் சேர்த்துக்
கடைக்கணித் திடுக! அடுத்திட மணமே.

பராக்கிரம பாண்டியன் :

5 மணமா! யாதது? வந்ததென்? புகல்வீர்!

கூத்தர் : குணமாம் வையைக் குளிர்புனற் றுறைவ!
குவலய நனிபுகழ் குலோத்துங்க வள்ளலின்
தமப்பனா ரிறந்திடு சமயம் புகன்ற
மணச்செய்தி யொன்றினை வழுத்தவு மன்ன! நின்
10. காட்சியைக் காணவு மாட்சியாய் வந்தனன்.

பாண்டியன் : ஓகோ! ஆயின், ஒன்றினை முடித்தீர்;
மற்றொன் றினைநீர் வகுத்திட லாமே.

கூத்தர் : அரசர் பெரும! அவரெம தரசனை
நோக்கியே, 'நமது நால்புரை கதிரவன்
15. குலத்தினை மதிதன் குலத்தினிற் கிழமையாய்ச்
சேர்த்திடு முறையினைச் செல்வ! நீ கைவிடேல்!'
என்றுரைந் தேகினர், ஆகலின், வென்றிசேர்
மன்னவர் பெரும! நின் மகளாங் கற்பக
வல்லியை யெங்கள் மன்னவர் பெருந்தகை
20 புல்லியே வாழப் புகன்றேன் றிருமணம்.

பாண்டியன் : மாபபெரும புலவா மதிததிடு மணியே!
(புன்னகையுடன) பாணடவா மரபாம பாண்டிமா குலததிற
காண்டகு கனனிநங் கறபக வல்லியைத
தீண்டிடச சோழன் சிறப்புக ளெனனே ?

வேல்வாயன் :
25 சிறப்புக ளென்ன சோழநன னாட்டில ?
வரப்புகள மிகுதி, மகிதல மறியும!

(எண்சீரக கழிநெடிலடி யாசிரிய விருததம)

கூத்தர் :
கோரததுககொபபோ கனவட்டம அமமானே!
கூறுவதுங காவிரிக்கு வையையோ ? அமமானே!
ஆருக்கு வேமபுநிக ராகுமோ ? அமமானே!
ஆதிதத னுககுநிக ரமபுலியோ ? அமமானே!
வீராககுள வீரனொரு மீனவனோ ? அமமானே!
வெறறிப புலிககொடிககு மீனகொடியோ? அமமானே!
ஊருககு நநதைநிகர் கொறகையோ ? அமமானே!
ஒக்குமோ? சோணாட்டைப பாண்டிநா டமமானே!

(நிலமண்டிலத தொடாச்சி)

வேல்வா : போடடா! நல்ல போடுநங் கூததா!
சோழ னிவருங கோரம், பாணடியன
கனவட் டத்தினைக் காட்டினு மிகுமாம!
30. காவிரி வையையைக காட்டினுஞ சிறபபாம!
ஆததி மாலையைக காட்டினுஞ செழியன
வேபப மாலை மிகுதியுங கசபபாம!
கதிரவன எதிரிற் கவினமதி வெளுககுமாம!
புவிதனில வீரன் புகழகுலோத துங்கனும!
35. காட்டுப் புலிககுக கடலமீ னஞசுமாம!
கொற்கைக குறையூா குணததின மிககதாம!
பாணடிமா நாடு பழஞசோ ணாட்டை
வேண்டுமாம பிலவளம்! வெருகளி!
இவையெலாம
சிறபபெனும வரப்பு, நீா தேககிடும வரப்பே!

புகழேந்தி 40 ஒட்டக் கூத்தரா முயாகவிப் புலவீர!

(எண்சீரக் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

ஒருமுனிவ னேரியிலோ? உரைதெளிந்தது அம்மானே!
ஒப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ? அம்மானே!
திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ? அம்மானே!
சிவன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ? அம்மானே!
கரையெதிரே டேறியது காவிரியோ? அம்மானே!
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ? அம்மானே!
பரவைபணிந் தத்துஞ்சோழன் பதந்தனையோ? அம்மானே!
பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே, அம்மானே!

(நிலமண்டிலத் தொடர்ச்சி)

வேல்வா: கொடுத்தார் புலவர் குடையுங் கொடையே!
விடுத்தார் நல்ல விளக்கமாம் விடையே.

கூத்தா ஆமாம் புலவீர! அழகமா பாண்டியன்
வெற்றியை விளக்க மறந்தனி யிங்கே!
45. நற்றவத் துங்கனே,

(நேரிசை வெண்பா)

வென்றி வளவன் விறல்வேந்தா தம்பிரான்
என்று முதுகிற் கிடானக்கவசம்—துன்றும்

. . . . . . . . . . . . (கண்மூடிச் சிந்திக்க)

(நிலமண்டிலத் தொடர்ச்சி)

வேல்வா: நன்றுய்ப்ப பாயலில
தூங்கும், கனவிற் றோன்றும் யாவும்

(நேரிசையின் தொடர்ச்சி)

புகழேந்தி:

வெறியார் தொடைகமழு மீனவர்கோன் கைவேல
ஞறியான புறங்கொடுக்கி னென்று.

(கூத்தா முகஞ் சுளிக்க)

(நிலைமண்டிலத் தொடர்ச்சி)

வேல்வா : அப்படி! அப்படி! அதுதான் சரியே!
இப்புவி யதனி லியலப்புடைய பெரியோர்,
'அவன்கை கொண்டே யவன்கண் குத்தல,'
50. எனப்தித்துவே! இதுவே! சரி! சரி!

பாண்டியன் : போதும், போதும், புகழ்வெல் வாயர்!
போதும் விகடம். புலவீர்! உமது
போருங் கண்டோம், புகழ்ந்தோம் நும்மை.
வாரும் நமது மணவினை யதுதான்
55 சேரும் வகையைச் சிந்தனை செய்வோம்.
கூத்தப் புலவீர்! கொண்டநுங் கருத்தைக்
கேட்டே மகிழ்ந்தேம் தேடில் வாழைப்
பழமது நழுவிப் பாலில் விழுந்த
தன்மையாய்க் கொண்டோம். தமது விருப்பப்
60. படியே மாமண வோலையைப் பழைய
அரண்மனைக் கணியா ரமைத்துக் கொடுப்பர்.
வாங்கியே சென்று நும மன்னரை விரைவிற்
பாங்காய்ப் புறப்படப் பகருவீர்.

கூத்தா . பாண்டியா
பெரும! அங்ஙனமே பிழையறச் செய்வல்
65 வருகின் றேனின் மலரடி வாழ்கவே!

(போக)

(கொலுக்கலைந்து காட்சி முடிகிறது)

# முதலங்கம்

## இரண்டாங் காட்சி

இடம் பாணடியன அரணமனையில அநதப்புரம
காலம்' பிற்பகல்.
நடர் கறபகவல்லி, செநதாமரை, வெணடாமரை.
(கறபகவலலி தோழிகளோடு அமமனையாட)

(இவையாறுங கலிததாழிசைகள்)

சேந்தாமரை .
வெளளப பெருககுமிகு மேலான காவிரிககே
உளளப பெருககுவையை யொவவாதா மமமானை,

கற்பகவல்லி .
உளளப பெருககுவையை யொவ்வாதே யாமாகில,
பிளளையின கையேடடாற பிறங்கியதே னமமானை?

வெணடாமரை :
பிறஙகியது சிவன்முடியிற பிறந்ததா லமமானை

சேந்தா : ஆருககு வேமபுமிக ராகுமோ ? என்றொருவர்
ஊருககுள வநதின றுரைததாாகா ணமமானை,

கற்பக ஊருககுள வநதின றுரைததாரே யானாலும,
பேருககு மாலையனறிப பேயோடடா வமமானை

வேண்டா : பேயோடடா வென்றார பெருமபுலவ ரமமானை

சேந்தா : ஆதிதத னுககுமிக ரமபுலியோ? எனறொருவா
வாதிதது நமமவையில வழககுரைததா ரமமானை ;

கற்பக . வாதிதது நமமவையில் வழககுரைததா ரானாலும,
ஆதிசிவன றனமுடியி லமாநததுகா ணமமானை ,

வேண்டா அமாநததெனறார? புகழேநதி யாமபுலவ ரம்மானை

சேந்தா புலிககொடியின மீனகொடியும புல்லிதென றினறொருவா
வலிததுரைத்தாா நமமவையின மாயமோ? அமமானை,

கற்பக: வலித்துரைத்தார் நம்மவையின் மாயமாயானாலும்,
புலியுருவோ? திருநெடுமால் புரிந்தெடுத்த தம்மானை,

வெண்டா: புரிந்ததுவும் மீனெனவே புகலவீர்கா
ணம்மானை

செந்தா: ஊருக்கு நகைதங்கு கொறகையோ? எனவொருவர்
போருக்கு நம்மவையிற் புகுந்தார்கா ணம்மானை,

கற்பக: போருக்கு நம்மவையிற் புகுந்தாரே யாமாகில்,
ஊருக்குள் திருவிளையாட் டுறநகையிலோ? அம்மானை,

வெண்டா: உறநகையன்று, மதுரையென வுரைப்பீர்கா
ணம்மானை

செந்தா: வீரர்க்குள் வீரனொரு மீனவனோ? எனவொருவர்
மாறாகக்குத் தீங்குரைக்க வந்தார்கா ணம்மானை;

கற்பக: மாறாகக்குத் தீங்குரைக்க வந்தாரே யானாலும்,
மாறனையே பெரும்பரவை வழிபட்ட தம்மானை,

வெண்டா: வழிபட்ட தல்லாமன் மணங்கொண்டா
ரம்மானை.

(நேரிசை யாசிரியப்பா)

கற்பக: ஏதடி? வெண்டா மரையே! அம்மனைப்
(வெட்கத்துடன்) போதும் விடாயோ புகலுங் கேலி?

வெண்டா: கேலியன் றம்ம! கிளர்பூ ரிப்பால
வேலியா மடக்கம் விண்டது தாயே!
5 குலோத்துங்க வள்ளல் கொள்கையிற் பெரியர்,
வலோத்துங்க வீரர், வண்மையிற் புயலே;
ஆட்சியில் வலியர்; ஆயினும், கூத்தர்
சூழ்ச்சியில் லாமற் றுரும்பும் பிறழார்.

செந்தா: கூத்தர்தா னென்ன குறைபா டுடையர்?
10 சாத்திரங் கண்டார், தவப்பெரு மதியர்,
கவிகளி றுகைக்குங் கவிராட் சதனெனப்
புவிக்குயர் கவுடப் புலவரு மாவர்.

வேண்டா. ஆயின், புலன் சென்றதா, அதனில் பறந்தும,
கூறிய சொன்னதையே கொண்டவர் பெரிதாய்
15 இன்றுமன் னவையின மன்றதில் தேடிச
சோழ வம்சத் தொல்புகழ் கூறப்
பாண்டியர் குலத்தினைப் பழித்தனர், பல்படி

கற்பக. பழித்தன் றலவோ . பாவாய்! புலவரின்
மொழித்திற மதுவே அன்றியு மொன்றினைத்
20 தாழ்த்தநீ பற்றினை வாழ்த்தலை மென்பது
புலவிற் சொல்லோர் போகட்டும் விடு, விடு
செந்தா மரையாந் தெரியிழாய்! நீ போயப்
பந்தா டுதற்குப் பாங்கிகள் தம்மை
யுய்யா னத்தி லொருங்குட னழைத்துவை!
25. வந்தோ மிருவரும்

சேந்தா. வழுத்திய படியே
சென்றனன் (செல்ல)

வேண்டா. சொன்னவையைத் திருமுடி பணிந்தோன்
மன்றினிற் பணிபயன் வாய்த்தது நமக்கே,

கற்பக. ஆமாம், தோழி! அடியேன் வேண்டுகோள்
வாம்மா நற்கிழி வந்தது முதலா
30 வெண்பத் தறிகுவை இன்றது முடிந்தது,
மன்பதை யாவும வகுத்தவ னருளால
ஆயினும், இருபுற வகனமர் காதல்
வாய்த்ததோ? எனவே வருமோ ரையம

வேண்டா: பூரணச் சந்திரன் பொலிவாற் பொங்கிய
35 பாரணி பாண்டியர் குலமாம் பயோத்தி
வந்திடு கற்பக வல்லியாந் திருவே!
உந்திடு காத லின்றியே யெவரும
வந்திடல் மணத்தினைக் கொண்டிட லென்பது
நெருப்பின்றி யேபுகை நின்றிட லொக்கும.
40 ஆகலின், இருபுற வகனமர் காதலிற
பாகின மொழிசோ பாவாய்! ஐயுறேல!

கற்பக கண்டெனு மொழிசோ வெண்டா மரையே!
வணடமிழ்க் கூத்தா வழுததிய தெனகொல?
‘தநதையார முன்னர்ச சாறறிய மாறறமே,
45. வநதிடச செய்ததிம மணததினைப பேசிட’,
எனறன ரன்றோ? இதறகு எயர்ததனை?

வெண்டா: அன்றெம பொற்கொடீ! அயர்ததன னல்லேன.
ஆயினும, மணததினை யறைவோர பலவித
வாயிலகள் கூறன மகிதலத தியலபே
50. அன்றியும், முன்னு மனுப்பிய கூனி,
தெனறமிழ்ச் செல்வி! நின சிததிரங காடடிக
நாதனுங கூறிய பின்னரே யன்றோ?
ஓதற கெழுநதன ரொழுங்காய்க கூததா
ஆதலிற காதலி லணஙகே! ஐயுறல

கற்பக: 55. வெண்டா மரைவாழ வண்டமிழ வாணியைக்
கணடா லொதத காரிகாய்! உரைத்தன
அனைததுஞ சரியே. அமபிகா பதியின
மனககருத தினைநாம மன்றலிற காண்குவம.
செநதா மரையாள் தென்றலஞ சோலை
60 வநதுமே யிருபபள வா! வா!
செநதளிர்க கைகளாற பநதினை யுநதவே

(செல்ல)

(காட்சி முடிகிறது)

# முதலங்கம்

## மூன்றாங் காட்சி

இடம் : பாண்டியன் அரண்மனைப் பூஞ்சோலை.

காலம் : மாலை.

நடர் : கற்பகவல்லி, செந்தாமரை, வெண்டாமரை, தோழிகள், குறத்தி.

(கற்பகவல்லி தோழிகளோடு பந்தாட)

(கந்துகவரி-இவை மூன்றுங் கலித்தாழிசைகள்)

கற்பக :

சந்தமார்ந்த தோளிரண்டுந் தாவியாட வாண்முகம்
அந்தமார்ந்த முத்தினைவேர்வை யளித்திடவே
சோமன்வாழ்
சுந்தரமமாம வழுதிவாழ்கத தொடர்ந்துபந் தடித்துமே
சொக்கலிங்கம வாழ்க ! என்று தோழிபந்
தடித்துமே. (க)

செந்தா

கொந்திலங்கு பூங்குழற் குழன்றசைய மேகலை
கந்திலங்கு செங்கரங்கள கன்றுமென்றே யார்த்திட
சந்திரன்கு லத்துமாறன் றனைகளென றடித்துமே,
தாவிலாரம பூண்டமாப்ன றழைக்கப்பந்
தடித்துமே (உ)

வெண்டா .

பந்துகையிற் பூமியிற் படிந்ததில்லை வானிலே
வந்ததில்லை யென்னவே மாதர்யாருங் கூறிடச்
சொந்தமான வளவனவாழ்கச்சொலலிப்பந் தடித்துமே,
சூரியன்றன் மரபுவாழ்கத தோழிபந்
தடித்துமே (ங)

(குறத்தி தோன்ற)

(குறம்-அறுசீரக் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

குறத்தி

பாரினி லடப்பன நடந்தன பார்த்துமே
கைக்குறி சொல்லிடும்
நேரியில் வாழ்ந்திடு குறத்திநான் நேரிழை
மார்களே யுங்களில்
ஆருடைக் கையினைக் காட்டினு மவன
வகத்தியங் கூறுவேன்
வாருடை நேருடை மங்கைகாள்! வழங்கிய
வொருகலை வழங்குமே. (க)

(நிலைமண்டில வாசிரியப்பா)

வேண்டா. ஓ! கோ! மலைக்குற வுத்தமி யோநீ?
மாகா திப்பறகு வாயத்தநல லமுதாங
கற்பக வல்லியின் காந்தளங் கையினை
அற்புளத் தோடே யாடியிற் பார்த்துப்
5 பிறபக னிகழுவன பேணி யுரைப்பிற
கறபகஞ் சார்ந்த காக்மே போலப
பொறபகம் பெறுவாய், புகரினை நீகாத்தோய!

(குறத்தி கற்பகவல்லியி னிடக்கையினைப் பார்த்து)

(குறம்-அறுசீரக் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

குறத்தி

கையினி லிரேகைசி வந்துமே
காணுத்தற கற்பமாய்ச சிறுத்துமே,
செய்யினிற கண்டிடு தாமரை
சேர்ந்துமே, புத்தியா மிரேகையும்,
துய்யதோர் பெருவிர லிறையினிற
றொடுத்ததோர் சங்கிலி ரேகையும்,
ஐயெனச் சூட்டிய விரலடி
யழகிய விறைபல வரியுமே (உ)

காணலான மங்கைமீர்! பொற்றொடி
கருதிய செல்வமு மாயுளும்,

மாணுடை லட்சுமி வாசமும்,
வாணியின் வாசமும், யாவரும்
தாணிழற் சேர்ந்திடு போகமுந்
தளர்தலில் வெற்றியுஞ் சேர்ந்துள்ளன.
மாணிழை காதலிற் கதித்துள்ளாள்
வடதிசைக் கோனுக்கே வாய்ப்பனே (௩)

காலமிரண்டுநான் கூறினேன்,
கதிர்மதி தப்பினும் பொய்க்குமோ
பாலினு மெய்யினை மானவே
பலித்திடு நிச்சயம், பழையதோர்
சேலையுங் கஞ்சியுங் கொண்டுதந்திடுந்
தேடுவ னென்மகன் விரைவினில்
ஓலையும் மட்டையுங் கொண்டுபோ
யுதவிடல் வேண்டுவன் நிறுத்தினே (௪)

(நிலமண்டிலத் தொடர்ச்சி)

வேண்டா. கைக்குறி யுணர்த்திய காரிகாய்! உனக்கு
மைக்குறிக் கண்ணி மகிழ்ந்துமே கொடுத்த
10. மாலையை வாங்கி வாழ்த்தியே செல்வாய்!

(முத்துமாலை யொன்றைக் கொடுக்க)

குறத்தி மாலையாய்ச் சுட்ட பன்னம் வந்துமே சுழலும்
நாறிருங் கூந்த லணங்காய்! குடரிற்
பசியால் வாட்டமும், பழையதோர் கந்தைத்
துணியால் வாடைத் தொல்லையு மடையும்
15 எனக்கேன் முத்தா லியன்றவிம் மாலை?
மனக்குறைக் கிணைவிண் வார்த்தையிற் படுத்தவோ?
ஊணு முடையு முணவும் பூணவுங்
காணுதல் போல, காட்சியி லெப்பொருள்
மாணுறக் கண்டனை? வழுத்துவாய் சிறிதே!

கற்பக .20. அறிவினு மாண்டினும் பெரியோய்! கூறிய
அனைத்துஞ் சரியே அவ்வணஞ் செய்வோம்.

(செந்தாமரையை நோக்கி)

செந்தா மரைவாழ் திருவே யனையாய்!
நந்தா விசுகுறி நங்கையை யழைத்துச்
சென்றுநல் லூணுஞ் சிறந்தவோ ராடையுங்
25 கன்றினைக் கற்ற கரவா தூட்டன்
மானக் கொடுத்து மகிழ்ந்திடச் செய்து
காணிக் கொடியே! கடிதினில் வருவாய்!

சேந்தா. செப்பிய படியே சென்றனன், வருவல்,
மைப்படிந் தன்ன வாளமா கண்ணீ!

(குறத்தியுடன் செலல)

கற்பக: (மற்றத் தோழிகளைப் பார்த்து)
30 பாங்கிகாள்! ஆடிய பந்தினைப் பார்த்தவா
'வாங்கிடு மோசை? வருமோ பூவினில்?
இடைவெளி தனிறந னியங்குமோ?' எனவே,
அடைவுடன் கூறிய வப்பந் தாட்டம்
குறத்திகைக் குறியாற் குடங்கையி லணைந்த
35 திறத்தினைக் கொண்டது, திருமபவு நாளை
யாடுவம், சென்று வருவீர் அஃதோ

(செந்தாமரை வர)

தேடுதற் கெளிதாயச் செந்தா மரையும்
வந்தனள், மூவரும வண்கா னுகாந்து
தென்றலி னெங்கள் சிந்தையைத் திருத்திச்
40 சிறிதிவ ணமாந்து திருமபிடு வோமே.

முதற்றோழி. மறியமா கணணீ! வழுத்திய படியே
சிறியேஞ் சென்றனம.

(தோழிகள் போக)

கற்பக' (செந்தாமரையை நோக்கி)

தேமொழிக் கிளிளையும,
முலலைப் பூவும, முருக்கி னிதழும
சொலலெயி றிதழிற் றோறகு நங்காய்,
45. வலலையிற் றிருமபிய நலலெழில யாதோ?

சேந்தா : இந்திரை யவளினு நந்தொழின் மிகுந்த
பைந்தொடி நங்காய! பாாவதி யன்னைய
செவிலியை வழியிற் கண்டனன, செப்பினன்.
தவிசுடைத தாயு மவளுந் குறததியைக
50. குறியாற றெளிந்து கொடுததிட வுனனிச்
செறியா தெனனத திரும்ப விடுத்தனள

கறபக : நன்று! நன்று! நமமுடைப பிதது
மனறலி னேர்ந்ததது. மற்றவர் கடகென்?

வெண்டா : அனறென தாயே! அவாகட கேயிம்
55 மனற னமமினு மகிழசசியை யளிப்பது
ஈன்ற ஞான்றினு மிணையறு மணந்தைப
பூண்ட ஞான்றே புதல்வரைப பெற்றோா
களியெனுங கடலிற கவலையாந தெப்பம
பழியென விலககிப பாய்ந்தின் புறுவர்

கற்பக 60 ஆமாம, தோழீ! அவாகட கேமமம
சேமமாம, ஆகலி னனறே? திருமண
மககளின மனககோள வையகந தன்னிற
றகக தனறெனத தகைந்தன ராகி
நடத்திடு பெறறோா நாடொறு நாட்டினிற
65. குடககெழு மதியெனக குழுமிடல காணுதும.

வெண்டா கலைமக ளௌவையைக காட்டினில வென்ற
இலைமுக வைவே லிணையடி மறவாத்
தையால! இஙஙனஞ சாறறேல! பணபபேய்க்
கையா ளனறோ? கண்ட திமமுறை

சேந்தா : (கறபகவலலியை நோககி)
70. பிதத மெனறதென? பேசிடு சோதிடம
உத்தம வாருட மோஙகிய விரேகை
சாத்திர மெல்லாந தவறோ? வார்குழால!

கற்பக : ஆததிரப் படேலெம மன்னையே யனையாய்!
சோதிட முதலாச சொலலிய பலவும
75. வாதிட வொணணு மாபெரு முண்மையே.

ஆயினு முனைமையா யறிந்தோா மிகசிலா
தாயினுஞ் சிறந்த தனமையா மசிலா
காணுதல், காாத்திக்க நவிளமதிப பிறையைக
காணுக வொா.ஆ நா ளி.ஹ, அவாகொள
80 செருககு மவாவுந தெனனவன பொதியைப
பொருபபினு மிகுமே எனினும, புகனறது
நன்றிறனி னலடைகிய நனமலை யேறிக
குனறெனு நெஞ்சக கோட்டையைக கட்டிப
பருகதறி வதனைப பனைகவனைந கொணடு
85 வருதலவன செயல்லயு மடியாற றொலைபபா.
திதெனில, அநதோ! திடமெனத துயாங
காதது கவலை கடலினி லாழநது,
'தெயவந தனனை யாகா தெனினுஞ
செய்வினை முயறசியின் கூலியாச சிறிது
90 பெறுகுவா,' எனற பெரியோா மொழியும
வறிதே யாக, மயஙகியே நலிவா
ஆகலின, அணஙகே! அவனியி லெவருந
தாகமாயச சோதிட சாததிரங கேட்டுத
திரிவதைக காட்டினுந திகமபா னிணையடி
95. பரிபவ மனததிற பாஙகா யிருததி,
கடமையைச செயது, காரியாநு கூல
மடமையிற சிநதையை மட்டுப படுததி,
வாழதலே நனறும மடவாற றோகாய!
அணியாயப பூததுள வவவசோ கினமிழன்
100 மணியாய மிழறறிடு வனிதைகாள! சென்று,
கனனற பொழுதினைக் கழிபபோம, வருவீா!

(மூவருஞ செனறமா)

(அசோகினை நோககி)

எனனே! பாஙகிகாள! இமமா மரததிற
பொனனே ரசோகப புதுமலா நிறைநதன,
வறியசெவ வாயசகு வழஙகிடு மஙகளப
105 பொறியுடை வாா மெனவே புகறல,
மானச சோக மலாாய மாறின!

நானகக் கூந்தலும நல்லதோர் கலையும,
வளையம, நாணும, மலர்கக ணிருஞ
சோருமிஃ தெனனே ! தூயதோர நெஞசம்
110 நீரினுட கயலாய, நிலையா தநதோ !

(சோாநது சாய)

செந்தா : (கற்பகவல்லியை இருகைகளாலணைத்து)
ஆ ! கா ! இளங்கொடீ ! அருமபெறற் பாவாய் !
மாகா திபறகும் வாய்ததிடாக கற்பகக்
கொடியே ! வநததென ? கொடியினிம
மூாற்றம் !

வெண்டா (கறபகவலலியை நோககி)
பூவைபு மொழியி லா வலகொ ளணஙகே !
115 தேவை நிகாத்தவிவ வசோகு தெளியின,
கூடிஞாக கனறிக கொழுநனிற் பிரிநதாா
வாடிடச செய்பு மதவேள தனது
பூங்கணை யைநதிற புலவிய வுணர்விளை
வாஙகிடு சோக வாளியென றுணாவாய !

கற்பக 120. வெண்டா மரையே ! விளமபிய தொவவும,
கொண்டா டுஙகனி யெனவே, குடதிசை
கண்டான கதிரவன கடிமனை புகுந்திடப
போவோம், வாரீா, பொருவில பாஙகிகாள !
காவினை நீஙகுங கடிமயி லெனவே.

(மூவரும போக)

(காட்சி முடிகிறது)

# முதல் அங்கம்

## நான்காம் காட்சி

இடம்: பாண்டியன் அரண்மனை அந்தப்புரத்திலுள்ள நிலா முற்றம்.

காலம்: முன்னிரவு.

நடர்: கற்பகவல்லி, வெண்டாமரை, செந்தாமரை.

(கற்பகவல்லி அணையிற் சாய்ந்திருக்கப் பக்கத்தில் வெண்டாமரையும், செந்தாமரையுஞ் சூழ்ந்துபசரிக்க)

(நிலைமண்டில வாசிரியப்பா)

கற்பக: ஐயோ! அனலினைச் சார்ந்தென வப்பி
மெய்யினை வாட்டலிர்! விடுதிர்! விரிதிரைப்
பாற்கடற் பிறந்த பானிலாச் செல்வனும்
மாற்கூற்றப் படுத்தனன். மாநில மதனில்,
5. "கெட்டார் தமக்கு நட்டா ரில்லை,"
என்றே தமிழ்மறை யியம்பிய வதனை
இன்றே கண்டனன் என்னருந் தோழிகாள்!
வெள்ளிவெண் குடநிறை விழுப்பயன் றனைத்
துள்ளியங் கொருவன் றுடுமென வறிதே
10. கவிழ்த்தா லொக்குங் கவின்மதி யொளியெனப்
புவிபுகழ் கூல வாணிகப் புலவன்,
உரைத்தது முழுதும்வீ ணுபசா ரம்மே.
கருப்பு விலுடைக் காமனுங் கொடியோன்
நெருப்பினைத் திராவக நீர்மைய தாக்கி
15 மதியெனும் வெண்கல மாண்புற நிறைத்துச்
சதியாய்ச் சொரிந்தனன், சற்றும் பிசகிலை
அதோபார்! பூதிபா லமர்ந்துள விசாகையும்
மதோஒன் மதத்தனின் வளாக்கலை நெருப்பாம்
பேரிணைப் பொருந்துதன் பெரிதா முருவினை
20. நீரினி விட்ட வுப்பது நேடி

யனக்கு மனவி வசப்பட்டா வதுபோல்,
இழந்தன ணினருள்.

வேண்டா: ஏந்திழாய்! முன்னர்
ஒருகா லீணடே யோகையோ டமர்ந்து,
"புரிகுழன மஙகையர் புல்லிடு கணவா
25 மயமாய மாறி, மற்றவா பாற்காண்
செயலுந் தன்மையுங் கொண்டு திகழ்ந்திடன்
மரபா மெனபதை வாணிலாச சார்ந்து
கையக நெல்லிக கனியென விளக்கும்
காாததிகை திறததினைக காண," எனக்
கூறுசொற்
30 போாததிறம விட்டுப புலமபுவ தந்தோ!
காணத நறியேன! காரிகாய! வடமீன
நாண முதலிய நாறகுணம் பூண்டு
காமுகா செயலைக கணடுந் வருததுப
பூமியை நோககும பொற்கொடி போன்று,
35 நமமிடைப பலமறை நவின்றிட விருமபி,
"வம்மின! வமமின்!" என்றழைததிடுவதை
மான மின்னி வயஙகிடல் காணுதி!

சேந்தா: வெணடா மரையே! கண்டனெம, மீனென
அருநததி நாளை யறைநததென்? நீரிற்
40 பொருநதிடு மீனைப புலரவைத திட்ட
கருவா டன்றோ கருதிடின் வடமீன்?

கற்பக: (சிரிபபுடன்)
ஏ! கே! வடம! வடாம! மீனவடாம! ஏ! சே!
வாகே செபபிணை! வடமீன் கருவா
டாமே! அதுசரி!
(வெணடாமரையை நோககி)
அயனா நாவாம
45 பூமே லமாநதாள பொருந்திடு மிடததைப்
பெயராக கொணட பேதாய! உனமொழி
அயரா நகைபபை யருததிய தறியாய!

வெண்டா. செந்தமிழ் பயிலுஞ் சிறுவய ததனில்
நொந்திடுந் தலையென நுவன்றசெந் தாமரை
50. வடமீ னென்றையோ வடாம் தாக்குவள்?
குடக்கெழு பிறையையும் புரையதாக் கொண்டு
பாலினிற் குத்தி மேலவர் விரும்பும்
அருந்ததி யாக்குவள். இவள்போ லொன்றரு
சிறுமியா மருகியை யருமையா மாமி
55 நோக்கியே, "பரணியி லுவன்றிடு மட்டப்பினை
ஆக்கிடல் வேண்டும்; அகத்தியம்," என்றனள்.
அறிவிலாச் சிறுமி யதனைக் கேட்டு,
"சிறியே னெங்ஙனந் தெண்ணீர் கொண்டு
சூறுக்குவ தாண்டு? குறிப்பிடு வாய்!" என
60 முறுமுறுத் தனளாம், முறுவல் பலர்கொள

கற்பக (புன்னகையுடன்)
நன்று! நன்று! இதனினு மதுவே
நன்றும் நாட்களைக் கொன்றிட லிவையே!
பரணியும் பரணாய் மாறிய தந்தோ!
என்னே! என்னே! கல்வியைக் கைவிடு
65 பெண்களி னில்லை! பேசுவெண் டாமரைக்
கண்மணி யனையாய்! கட்டுரை யொன்றுற்
செந்தா மரையின் சிந்தையைத் திருத்த
முந்திடு வாயே! முந்திடு வாயே!

வெண்டா: திருவினு மிக்க செந்தா மரையே!
70. பெருவிருந் தாகிய அருந்தமிழ் மொழிகளாம்,
'வடமீன்,' எனுந்தொடர், 'வடக்கும், மீனும்,'
என்றே பிரித்து நன்கே யிரண்டு
வார்த்தைக ளாகக் கொண்டிடு! முதன்மொழி
கூர்த்திடு திசையினைக் குறிக்கும் பெயராம்
75. திசையொடு பிறவாம் மீனெனுந் தென்மொழி
இசைந்திட விறுதி யுயிர்மெய் கவ்வோ
டொழிந்திடப் புணர்ந்ததே வடமீன். ஒண்டொடீ!

மொழிநதிடு மீனமொழி முனைத்திடு செயலினை
அறைகுவன கேண்மோ! அணஙகே! மின்னெனும
80 புரையறு முதனிலை புலவாதம வாய்வழி
வினைமுதற பொருளாம விகுதி புணர்நது,
கெடடுமுன னீண்டு, கிளரொளி விடடு •
மின்னுவ தாயவின் மீனினை யுணர்ததிப
பினனரே, மண்ணினிற பிறஙகிடு கயலினைக்
85 குறிததிட லானது கோதாய்! அன்றியும்,
பறியெனும பாசம பற்றிடு நடுவனும
பரதன பிறவிப பௌவந தன்னின்
மரணமா வலையை மாட்டியே வலிககத.
அடிததுத துளளித் துங்கமாம் வான்
90 அடிததலப பெருஙகட லமாநதிடு பலனுயிர
மீனகண மன்றோ வினணனுறு முடுததிரள் ?
ஆகலின, நாளினை மீனென லடுககும.
பாகெனு மொழியுடைப பைநதொடி நஙகாய!
வடபா லுளெனல கருத்தாம, மதியே.

கறபக . 95 தணடமிழ மொழியாந தனிபபெருங கடலை
யுணடிடு வெணடா மரையே! உரைததன
அனைததும வாய்மையே ஆயினும, மீனினைத
தெனமொழி யெனறதென? தெளிநதிடின், 'மீனம்,'
எனமொழி யனறோ விறுதி மறைநது,
100 'மீன்,' மொழி யாயது? மீனுட் சியெனு
மிலககியங கணடு மியமபிய தெனனே?
விலககருஞ் சொலலுடை வெண்ணகை யணங்கே!

செந்தா (ஏளனததுடன)
தமிழநிலக கடலையைத தணியா விருபபுடன
உமிழநீர பெருக வுண்டிடு சிறுமிவாயப
105 படுபய றியாவும பகாநிலக் கடலையாய்,
கடுநிகா கணணுப! கணடிட லியலபே.

கற்பக : • (முறுவலுடன்)
செநதா மரையே! விகடச செய

முநதுகின் றனையே ! முதுவெல வாயன
பிழைபபிற போட்டியாய்ப பிறநதனை போலும் !

வேண்டா (கறபகவலலியை நோககி)

110. உழைகிசா விழியாய ! உணாவைகொல ? சிறிது
நாளா யிருவரும நடபினா போல,
வாளா பேசுவா, வறிதே நகைபபா,
நாளடை வினிலே, நடபது காதலாய்
மீளா நிற்கும விரைவினி லறிகுவெம.

கற்பக (செநதாமரையை நோககி)

115. ஆ ! சா ! வியபபே ! அஙஙன மேயோ ?
தோகாய் ! ஒளிததனை, மிகுதியும ! துளஙகிடல் !
நடபோ ? காதலோ ? நவினறிடு வரியே !

செந்தா (நாணததுடன்)

ஊடபூ வினையே யிகழநதிடு நாசியாய் !
காதலோ ? நட்போ ? கழறிட வறியேன.
120. மாதுவெண டாமரை வடமொழி தெனமொழிப்
போரினி லஞசிப புகலிட மாக
வாரிக கொணட வமபுரை யிதுவே

கற்பக ஓதிட வறியாய ! ஆயினு முனமுகம
வாசிட லினறி மனமொழி யென்னும
125 இருபெருந திரையையு மெளிதா விலககித
திருவே யனையாய ! திகழ்நதிடு முள்ளப்
படுபொருள யாவும பனனியே முடிததது.

(வெணடாமரையை முறுவலுடன நோககி)

கடலை யுணட மடவரால ! "மீனம,"
வடமொழி யனறோ ?

வேண்டா அனறு, தென் மொழியின
130. முனையிற் றோனறி விளைவட மொழியே
காணெனும பகுதிகொள காட்சியா மொழியும்,

ஆனெனும் முதற்சொல் அடியாகச் சொல்லும்,
மானெனும் பகுதிகொள் மாட்சியாக் கிளவியும்,
பகுவெனும் முனைகொள் பக்கமாம் பகாச்சியும்,
135. இலக்கெனு முதனிலை யெழுந்திடு மிலக்கண
இலக்கிய மாய வெம்முடை யொலிகளும்
முறையே காக்ஷியும், ஆக்ஷியும், மாக்ஷியும்,
நிறைவுடைய பக்ஷமும், லக்ஷணம், லக்ஷியம்
ஆம்வட மொழியென அழிவழக் குரைத்துத்
140. தென்மொழி பழிக்குஞ் சிலாக்கே யன்றியிவ்
வெம்மொழித் தொடரினை, மீன்புரை கண்ணாய்!
மலயப் பொருப்பினை மாமுக ஊழி
நிலவிய காலே பிறந்து, நெடுமுடித்
தென்னர் புகழிலே திகழ்ந்து, முச்சங்க
145 நன்னா மாடம் நலம்பெற விருந்து,
வையை யெனும் பொய்யாக் குலக்கொடி
மெய்யிற் றவழ்ந்து, விளங்குமெவ் வூழியும்,
'காண்பேன் யான்,' எனக் கழறிடல் கடுப்ப
மாணப்போ காழி வள்ளல்கை யேட்டில்
150 பற்றுட னெருப்பிற் பசுமையாய் நின்று,
கற்றவர் நெஞ்சக் கவின்பெறு தெருவில்
சிற்றி லிழைத்துத் திகழ்ந்திட் டாடி,
தமிழ்நன் னாட்டுத் தனிப்பெருந் தூண்களாம்
மூபெரும் வேந்தரை முழங்கிட வளித்து,
155. கன்னட முதலிய கவின்மொழி யீன்று
கன்னியாய்த் திகழ்ந்தநங் கன்னிநன் னாட்டுச்
செந்தமிழ்ச் செல்வியின் சீரினை யறிந்தநாம்
விட்டிட னேரிதாம்

கற்பக. கட்டியை நிகர்மொழிக்
காரிகாய்! இவையெலாங் கழறுசெந் தாமரை
160. நாரியைத் திருத்தநாம் வேண்டின மன்றித்
தாயினைக் குறையுறச் சாற்றிய வாகா;
வேயினை நிகர்த்திடு மென்றோட் பாவாய்!
தொடர்குல மொழித்துத் துவன்றிய வென்றித்

தடாதகைப் பிராட்டி தனமணக் காதையை
165 இயம்பாய்! நாங்கள் இன்பினை யெய்தவே

## தடாதகை திருமணம்

(கலி வெண்பா)

வேண்டா · (யாழ் மீட்டிக்கொண்டு)

௧ " பூமேவு புத்தேளும் பூண்மேவு காவலனும்
தேமேவு ருத்திரரும் தேவர்களும்—போய்மேவும்
௩. செம்பொருளின் றண்ணொளியாய்த் தேடரிய பல்லுயிர்க்கு
மம்புவியிற் போற்று மருமறைந்தாய—நம்புமடி
௫ யாரிரும்பு மெய்ப்பொருளு நல்கு பசுங்கிளியின்
கூரருளா லுயேன குவிமார்க்கண்—காரிறமாயக்
௭. காணுது, செவ்வாய் வெளிறுது, காரயிற்கண்
பூணு பசுமைநிறம், புன்வயிறு—காணுதே,
௯ ஐயிரண்டு திங்க ளருளுஞ்சுமையுஞ் செய்யாதென்
கையிரண்டுந் தாங்கக் கவினமார்பும்—செய்ய
௧௧. வயதுமோரு மூன்றுய வருந்திருவே! பாண்டிக்
கயற்கொடியு நாடுங் களிக்கப்—பெயலாற்
௧௩. களிக்குநெடுஞ் சாதகம்போற் காசினியோர் போற்றத்
தெளிக்குமணிச் செம்பொற் றிருமா—குளிக்கும்
௧௫. மகுடம் புனைந்துமதி வல்லமைச்சர் சூழத்
தகுமே றரியணையிற் சார்ந்து—பகுவெண்மைத்
௧௭ திங்கணுதல் வெண்கமலச் செங்கமலக் கோயில்வாழ்
மங்கையர்கள் வெண்கவரி வைத்திரட்ட—சங்கையிலாக்
௧௯. கஞ்சுகர்கள் சேவைசெயுங் காந்தாரன் சேரனும்
மஞ்சரிணைக் கோலால் வழிவிலக்க—அஞ்சம்போற்
௨௧. செந்தமிழைக் கற்றுணர்ந்தோர் செப்புமறை நான் முதலாம்
நந்தவிலக்கச் செய்யு ளனைத்துணர்ந்து - சந்தமிகு
௨௩. சைவநூற் போதகர்சொல் சாரங் கருத்திருத்தி
மைவண்ணன் றங்கையைப்போன் மாநிலத்தைச்—
ஞ்சைவலம்போல்,

உரு. சூழுஞ் சுமதியின்றன் சூழ்ச்சியினு லொற்றால்
ஆளு மரசே ! அழகெல்லாம்—வாழுகின்ற

உஎ. மாட்சிமையே ! வீரமெலாம வாய்த்தவொரு பெண்ணணங்கே
பேடனமே ! யானகூறும பேற்றினையே—கூடியநல

உகூ உள்ளமொடு கேட்டுணர்வாய் ! ஓங்கியவிப பேருலகம்
கள்ளமிலாப பேரன்பாங் காட்சிபெற—வள்ளலாம்

ஙக. மெய்ப்பொருளாற் பல்லுயிர்க்கும் வில்லுமிழக் கட்டிவைத்த
வைப்புமிகு பள்ளியெனு மாட்சித்தே—கைப்புமிகு

ஙங பேதைமையுந் தன்னலமும பேராசை யும்பலவாம்
கோதமையு மான்மாக குவலயத்தில்—ஆதரவாய்

ஙரு. வந்தமைமை மாட்டன்பு மாத்தநதை சீற்றத்தார்
சொந்தவூ ராநாட்டார் தொல்லுலகோ—மைந்தமைந்த

ஙஎ. நட்டார் முதலோரபா ளெண்டவி லேபெருக்கி
நெட்டாலி னுணவிதையை நோகொண்டு—ஒட்டார்

ஙகூ உலகி லிலரா யொருபதியைப போல
அலகிலா வனபுருவாய் ஆநதூ—மலிந்கதி

சக வீட்டைதல் காண்டியிநத வேதகததைச் செய்யுமன்பு
வீட்டறததை விட்டடைதன் மேதினியிற்—காட்டு

சங மொளியினறி நுண்பொருளை யோதுமெனச சென்ற
களிமகனின் கட்டுரையாங காண்பாய் !—தெளியின

சரு ‘அறனெனப பட்டதே யில்வாழ்க்கை,’ என்ற
மறைமொழியி னுடபொருளு மன்னும்—அறத்கூந்தால் !

சஎ ‘கோமகக ளெமமுறையோ வம்முறையே பூமககள்
போமுறையாம,’ என்றமொழி புந்தியிறகொண்—
டாமுறையா

சகூ ‘மாமணததைக் கைககொள வகைதேடு வாய்மானே !
தேமணக்கும பூவே ! செழுநதேனே !—பாமணக்கும

ருக சொல்லணங்கே !” என்றனணஞ் சூரன்மகள் காஞ்சனையும்
வில்லார் தடாதகைபான் மேவியன்று—மல்லார்

ருங தடநதோட் டடாதகையாள தாய்முகததை நோக்கி,
“மடநோக குடையவென்றன் மாததாய் !—கடலைக்

ருரு கூறியன வாய்மை கொடுமுடியைப் பாதமிடும
வீரியராம வேலரசா விஞைசையிலோ—நாரிநான்

ருஎ. காதலுற ? அன்னாய் ! கட்டழகு யாண்மையொடு
வாதிறமின் வாஙகாத வாலறிவுந—தீதில

ருகூ உழுவலன்புங் கொண்ட வொருவனுககே யன்றிக
கெழுமியவென் காதலின்பங் கிட்டா—விழுமியவென்

சாக தாயே !'' எனககூறத தானகேட்ட வேநதிழையாள,
" ஏ ! ஏ ! அதுவேயென னெண்ணமுமாம—சேயே

சாங நினக்கு மணமகனா நோவரேல், நஙகாய் !
மனககுளளா நாண மலிய—தனககுன்றுய

சாரு நெஞசகத்தின மசதியி னினறிடுமிம மூனறுகும
வஞசகமு மாறி மகிழநதிடுவாய்—கிஞசுகமே !''

சாஎ. என்றுரைகக, மீனகணியு மினனணமேல யானதனை
வெனறியின்ற காணஙேபன் விரைநதெனவே—நனறிச

சாகூ. சமதியொடு சூழ்நது தொகுபடையைக கூட்டி
அமைதியுள்ளா தமமை யகற்றி—மமதையுளள

எக. பூவரசா யாரும புறஙகாட்ட வோட்டியிட்டுத
தேவரசா யாருந திகைததிடவே—காவரசோ

எங தெட்டாசை பறறிநிற்பா யாவரையும வீட்டிவிட்டு
நெட்டா ரிமவானை நோககுலைததுச—சிட்டாவாழ்

எரு. வெளளி மலையடுதது மிககுவரு பூதகணம
வெளவிடையா நநதியையும வெறறிகொண்டு—
வள்ளல்தன

எஎ. மாவரவு நோககி வலககையி லமபோடும
கோவிரவு நோமைக கொடுமரத்தைத—தாவில

எகூ. இடக்கையிற் கொண்டாவ மீததுததோட பினனில
அடககமாய்த தூங்க வரியே—றிடமகன்ற

அக. பொற்குன்றின மீதேறிப் போகுறிததுப் பாாததெென
நிறகின்ற தேரி னிமிாநதுநின்றுள்—பொற்குன்றை

அங. வில்லாக்கிய புனனகையான் மேவலரூர் மூன்றட்ட
பொல்லா மணியும பொருக்கெனறு—நல்லாண

அ௫. மனங்காணச செல்லும மணமகன்போற் றனனை
வணங்கா முடிமுதலா மாததா—னணங்காகப

அஎ பேர்ததளிந்து பணடெறிநத புததேளாங் காமனின்றே
ஆர்தநெழுநதா னென்றுலகோ ராாபபரிக்கக்—
காாததிரையிற்

அகூ. றோன்றி யொளிககாது துன்னுகினற மின்னலெனத்
தோன்றி விளஙகினன் தூயோன் முன-றோன்றுதலும்

கூக சேணுளாய்ப பொய்புகனறு சேவலெனக் கூசசவிட்டு
வாணனை விண்ணளாய் மாற்றியிடடு—நாணுளாய்ப.

கூ௨ போககித திரியும பொறியிலியின் பொய்மமூட்டை
வாக்கிற் றவறி வழுவிவிட—காககவிட

கூ௫. மினறி முகவெளுக்க வெசசெருக்குஞ் சென்றுவிட்
ன்னறியிலாத தன்முகததி ணுணமிக— னினறதுபோற்

கூஎ பூஙகுழலாள வீரப பொலிவழிந்து தெரிழிந்து
கோஙகுமுலை மூன்றிற குஞூரமாய்—ஒங்கு

கூகூ முலைமறைய நாணம முகமுழுதுங கொண்டு
நிலநோக்கு விகக நிலததை—முலைநோககும

க00க. மாதராள காலின் மணிவிரலாற் றுனுழுது
காதலான் நோககிக கவிழநதிட்டாள—தீதினறி

க0௨. "யானோககுங் காலை நிலனோககுமநோக்காககாற
றுனோக்கி மெல்ல நகும," எனனும்—நானோககங

க0௫. காட்சியாய்க காணக கடைககணிததாள நீலகண்டன,
சூழசசியாய வந்து சுருமபோட்டி—மாட்சி

க0எ. வலககரததைப பறறி மருஙகணைததுத தோமேற்
சலக்கரணை யாயமாநது தமமைக—கலககமிலா

க0கூ. மநதிரிகள சூழ வளாபடைக ளாாபபரிகக,ந
தநதிரிக ளெககாளந தானமுழஙக—சுநதரமார்

கக௧ மாகதர்கள வாழத்தெடுபப வநதியர்க ளேததிசைபப
நாகர்கள பூமாரி நாற்றிசையும—போகப

கக௨. புகுந்து மதுரா புரியாா மகிழத
தகுநதகு மென்றுபல சஙகும—மகிழநதாாபப

கசுரு. வந்தமண மக்களையும வாளவிழியாள கண்டுவந்து
சிந்தையாற போற்றிச செயன்முறையே—நந்தா

கசுஎ. மணமபுணாந்திச் சோக்க மதனும ரதியும்போன்
மணமபுரிந்தான நீடுழி வாழ்ந்து

(நிலமண்டிலத தொடாச்சி)

கற்பக: நஙகாய! யாழும பாட்டும நடகையான
மங்காக் காதலர் வாழககையை யொததன
பொய்யில புலவா பொருளினி லகததை
மெய்யாய்க் கண்டவர் போலும, விளஙகிழாய!

வேண்டா: 170. கணடது பட்டு மனறு, கனஙகுழாய்!
உண்டது முணடென வுரைககலாம. அன்றியும்,
புறப்பொருள் அறபபொருள் புகனறதென மட்டோ?

கற்பக: ஆமாம திருக்குறள ஆருயிா தமககே
ஏமமாம மறைபபொருள; இருந்தமிழ மறையே!

சேந்தா: (மேகந திரண்டெழ நோககி)
175. மறையே! மறையே! வானமு மறையே!
மதியு மறையே! மாநில மறையே!
மாமுகின் மறையே! மாமழை யுறையே!

(மழை பெயய மூவரும போக)

(காட்சி முடிகிறது)

(முதலங்கம் முற்றும்.)



# இரண்டாவது அங்கம்

## முதற்காட்சி

இடம்: உறையூர் வெளியின் ஒரு சார்.

காலம்: வைகறை.

நடர்: புகழேந்தி, மணிவண்ணன்.

(இருவரும் நடந்து கொண்டிருக்க)

(நேரிசை யாசிரியப்பா)

மணிவண்ணன்.

வெண்பாச் செய்யுளின் மிகுதிறற் படைத்தீர்
கண்போற் புலவீர்! காலமோ வைகறை
ஆமெனத் துணிய அடுத்தது புலரி
கீழ்த்திசை நோக்குமின்! கெடலரும் பகலவன்
5 கேழ்கிளர் கதிர்சில மேற்றிசை நிலவொளி
கலந்துடன் செம்மைசெய் காரிருட் படாத்தில்
நலந்திகழ் குறுக்கிழை நட்பன போன்று
செல்வதைக் காண்மின!

புகழேந்தி: கண்டோம், செல்மதி
புற்பனி பிரண்டி னுயரம் பொருந்திட
10 நிற்பதால், உவாமதி நெருநலே யாகலான்
வைகறை புகுந்திடல் வழக்கே!

மணிவ: பெரியீர்!
தைவக் குறுமுனி தண்ணீர்க் கரகமாம்
குடக்கின் றிழிந்து குதித்துச் சென்றே,
இடம்படு குறிஞ்சி யெங்குந் திரிந்து,
15 தடம்பணை தவழ்ந்து, குளம்பல தங்கி,
சோழமா நாடு சோறுடைத் தெனப்பைங்
கூழினை மிகுத்திடச் செய்தவிக் காவிரிக்
கரையா மோட்டினிற் காலைக் கடனை
முறையே கழித்து முறுக்கவிழ் தாமரை

20. நண்பனைக குணதிசை நலமுறக கண்டே
அனமையா முறையூ ரடைகுவம. முன்னாப
போகும படைகளும புகுநகோட்டை வாயில
வெளியே நிற்க விதிததனன், கண்டீா!

புகழேந்தி. ஆமாம, அறிநதேம. அவவணஞ் செயகுவம.
25 தேமாங் கனியெனத திகழுநதிடு குடமதிச்
சோரனே டாடிய தொல்லிரு ணஙகை
விரனு மெல்லோன் வரவினை முகவெளுத
திட்டா ளெனனக கிழததிசை வெளுககும
நோததிகண டிடுவீா!

மணிவ: பார்ததனன, நிகரில
30 தொலகாபபியனே தோனறினன மீணடெனப
பலகாற புகழுபெறு பணபுடைய புலவீா!
உடுத்திரள யாவையு மொவவொன றுக
மடுததிடு வீஙகதிா வன்மையை நோககுமின்!
திஙகளங கதிராற றேய்வுறுத தாரகை
35 கொஙகணி தாமரைக கொணகனின் கதிரான்
மாண்டிடு செயலின மாடசிதா னெனனே?

புகழேந்தி: மாணடிடு முலக மாபபொருட் டனமையைக
கணடிட விழையுங காட்சிசா லறிவைக
கொணடிடு மனபீா! கூறுமிப பகலவன
40 கதிரின வெமமை கடபுல நுணமையைக
கொதிததிடச செயது மறைததிட லாகவும,
மதிககதிா தடப மருவலான மீன்றிரள
தோன்றவு மாயின அதோகாண்! அருணன்
தோன்றினன இநதிரன ஞெலதிசை முழுதுஞ்
45. சிவநததைக காண்மின்! செருககள மானவே.

மணிவ: சரி, சரி, புலவீா! சாாநதனன, ஞாயிறு
செஞ்ஞாயி றெனற செயதியு மறிந்தனன
ஆனுல, உசசியி லகனறிடு காலை
ஆறு வெண்ணிற மடைதலு மேனே?
50. ஆறைப் பெருமபுகழ் அமைநதிடு புலவீா!

புகழேந்தி: நுண்மதி யுடையீர்! நுவன்றிடல் கேட்குதிர்.
கண்மணி யனையவிப் பகலவன் கதிர்கள்
செம்மை, பொன்மை, பசுமை, கருமை
கபிலம், பிங்கலம், நீலம் எனவெழு
55. திறத்தவாம் அவைகளே செந்தமிழ்ப் புலவரும்,
வடமொழி யாளரும் வாம்பசும் புரவியாய்
வழங்கிடு கின்றன. வகையா ரக்கதிர்
கொண்டிடு நாயகன் குறிக்கொளுந் தன்னையே
விண்டொடச் சுற்றியே விரைந்து நிற்றலால்,
60. எழுவகைக் கதிர்களு மிணைந்தே தம்மிற்
கெழுமிய வெண்மையைக் கிளர்ந்திடச் செய்யும்.
மேற்றிசை கீழ்த்திசை மேவிடு காலை
செம்மை நிறங்கொள்ளல் தெறுகதிர், கொடுமை
வெம்மை நீங்கிட மேதினிப் பரப்பிற்
65. சாய்ந்தே தண்ணெனத் தவழ்ந்திட லாலும்,
தடபம், பொன்மை பசுமை கருமை
கபிலம் பிங்கலம் நீலம் என்ற
அறுநிறந் தம்மை யகத்திடைக் கொண்டு
வானப் பரப்பெலா நீனிற மயக்கிச்
70 செம்மையை நம்மிடஞ் சேர்த்திட லாலுஞ்
செறிந்ததாம்: செந்தமிழ்ச் செல்வீர், தெளிகுவீர்!

மணிவ: ஆயின், வெண்ணிறஞ் செயற்கையோ? பன்னிறக்
கதிர்களின் றூயாய்க் கவினுறு மியற்கை
இலையோ?

புகழேந்தி: இலையது செயற்கையே கூறிய
75 காட்டாந் தாயையே கருதுவம், மக்களைத்
தருதலிற் சேயினு முதலாம், ஆயினும்,
கருவுறல், சமைதல் முதலாங் காரியம்
நாடிடிற் செயற்கையாம். அதுபோல், வெண்ணிறம்
பன்னிறக் கூட்டான் வந்ததாம். பகலவன்
80. உதயமா கிரியி லுறைந்திடு மதுவும்,

சவையநா யகனுந் தணமதித்த தூயோன்
மேற்றிசை யொருபனை யுயரமே னிறபதும,
அவியுண விணுமே லாகிய தென்றுசொல்
செவியுண வொன்றையே தேடுஞ சீரியீர் !
85 காலை யென்னுங் கவின்பெற கொல்லன்
வேலையா னீனிறப் பட்டுடை மேதினிப
பூவையின மார்பகம் பூணுபொற் காசு
மாலையொன் றியறறிட வளமாா கீழத்திசை
மலையாம பட்டடை வளாசெஞ ஞாயிறறைப
90 பொறியாங கதிரகள போயிட யாஙகணும
மதியாஞ சமட்டி வாஙகியே தாக்கி
நீணடு மோங்கியே வினைசெயன மானல்
காணடு மனறோ? மதியிற் களஙகம
கருவியின் பழமையும, காலையின் பன்மையும்
95. குழிக்கும உதயக கொழுஙகிரிக் காபபாற
சிவநதிடு பரவை செழுநெருப பாகும
அன்றிப பகலவ னுஞசிறு செல்வன்
குன்றும மாளிகைக் குவடதி லேறி
நின்றே தனகதிாக் கயிறறா னிமிாததது
100. நிறுததிய மதிககாற றடியை நெருங்கிச்
சென்றே வீழததுஞ செயலினைக் காண்மின் !

மணிவ ஓ! கோ! இரண்டாங கறபனை யுருவகம
வாகாய்ப பொருந்தி வாயத்தது, வியபபே !
பாகே யனையசொற் பைந்தமிழ்ப புலவீர் !
105 கதிரவன் கீழததிசை கடநதுமே லேறவும
சிறிதாய் மாறுஞ செய்தியென் தெரிபபீர,

புகழே :* வல்லா னருளா னலலறி வுற்ற
பொல்லா மணிவணப் புதுமையீர் ! கேளீர்.
சிறநதிடு வயிரச செழுமணி யொனறினைத
110. திறநதிடு வெளியிற் சோததே கண்டாற
சிறுததே காணலும, திகழ்நதிடு செமமணி
யகததே வைததுக் கண்டா லமமணி
திகழ்ந்தே சற்றுச் சிறபபாய்த தோன்றலும்

புரையக கதிரவன பூமியின பககலை
115. சாரநதிடு காலஞ சறறுப பெரிதாயத
தோநதிடச செயலும, திகழசசி யினறி
போநதிடு காலம் பொளளெனச சிறுததுக
காணுங கடபுலக காடசியின கூறும.
அன்றியுங் காலையி லருங்கண் ணோககம
120. பகலவன் வெமமைப பாதிப பினறிக
காணலிற பெரிதாய்க் காட்சியிற் பட்டும்,
நண்பகல் வெமமையால நன்கண நோக்கக்
கூடுத லினறிக் குறைவாயத தோன்றியுங்
காணுத லிலலையாம, கடக்களி றனையீர் !

மணிவ : 125 செநதமிழச செல்வீர் ! தெளிந்தனன், யாவும.
வநதனம, தொநதரை தநதனன், மிகவும.
செலவோம, காவிரித தெண்ணீ ராடி ,
விலலு மீனமுந தன்வயின விளஙக
ஆடும் புலிககொடிக கருகே பாவையா
130 ரேடும பநதுங் கழஙகுந தாங்கும
செலலா கோட்டையாற றிகழநதிடு
நலலூ ருறநதை நறபதி தனககே.

(இருவரும போக)

(காட்சி முடிகிறது.)

# இரண்டாவது அங்கம்

## இரண்டாங் காட்சி

இடம் : சோழன் கொலுக்கூடம்.

காலம் : முற்பகல்.

நடர் : ஒட்டக்கூத்தர், வேலையர், ஆறுமுகவேளான், கருப்பணுசாரி, வெள்ளையனுசாரி, கண்ணன், நல்லான், பெருமாள் பிள்ளை, அங்கணனுசாரி, வீரதேவன், நல்லமுத்து, நகைமொழிநாவலன், மணிவண்ணன், படைத்தலைவர் முதலியோர்.

(ஒட்டக்கூத்தர் முதலியோர் கொலுவிருக்க.)

(நிலைமண்டில வாசிரியப்பா)

கூத்தர் : (வேலையரை நோக்கி)

பிரித்தலும் பேணிக் கொள்ளும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல புகழ்சா லமைச்சே!
கவிச்சக்ர வர்த்தியெனப் புவிக்கு சாக்கிய
குலோத்துங்கக் கோவைப்போலவே குணமார்

5. வலோத்துங்க மன்னை மாநிலத் தறிவிரோ?
அன்னான் றன்னை யென்னுக் கொண்டு
புகழுமா றறியேன்! புவிதனில் யானே.

வேலையர் : படிதனி லொப்புமை பகரொணுப் புலவீர்!
மிடிதீ ரெங்கண் மேலவன் விளங்கக்

10. கலைமுழு துணர்த்திய கணக்காய ராகியும்,
அலைதரு மாட்சியை நிலைநிறுத் தியதோர்
அசசாணி யன்ன வழியாப் புகழ்பெறும்
மெச்சா ராற்றலாய் விளங்கியு மெழுந்தருள்
குலதே வாமுமைக் கொண்டர சாக்கிய

15. திலென்ன வியப்பு? யாது மின்றே!

நகைமொழி நாவலன்:

வியப்பென! எனக்கில் வெளிப்படை யாகிய
இரண்டோ டிரண்டினை யிணைத்தா றென்றும்
முரணுறு நான்கினு மொழியொரு வியப்பே!

கூத்தர்: (வேலையரை நோக்கி)

ஆயாம், அமைச்சே! ஆயினு நாமினி
20 ஏம மிவ்வுல கெய்திட நாடொறும்
உழைத்திடல் வேண்டும். நெருந லொருசில
பழையநங் குடிகள் பணிவா யென்னிடம்
வந்து, மிகப்பல வாழ்க்கைக் குரிய
நந்தலி னெறிகளை நாடுத லின்றி
25 மடிமை யெனனுங் கொடியோற் கடிமையர்ப்
புலவர் வடிவம் பூண்டுநந் நாட்டில்
அலகைபோற் குடிகளை யலட்டுவிப் பதுவாய்
முறையிடக் கேட்டனன். அம்முறை யீட்டை
விரைவினி னீக்கா விட்டால், நாட்டிற்
30 சோம்பலர் மடந்தை துடியெடுத் தாடுவள்.
ஆகலின், நும்முடை யரும்பெறற் சூழ்ச்சி
யாதென வோதுவீர், தீதுதீ ரமைச்சே!

நகைமொ: (தனக்குள்)

வந்ததா சூழ்ச்சி! வறியாக டமக்கு
நொந்திடும் வீழ்ச்சி நூற்றினு மிகுமே.

வேலையா: (கூத்தரை நோக்கி)

35 புலவர் பெருமான! புகன்றவை யனைத்தும்
கலப்பிலா வுண்மையே, கழறவும் வேண்டுமோ?
யானுமிப் போலிப் புலவர்க ணயப்பாற்
றேனீ நடுவண் சிக்குண் டவனே
மானத் துன்ப வகையெலாம் பட்டேன்.
40. ஆகவே, இதனை யம்புவி யதனிற்
போக்கவே துடைக்கப் போற்றினே னும்மை
ஆனால், ஒருதடை யடக்கு நம்மை.

மாறு ரைபபோன மயககுமிப் போலிப
புலவரை யருநகைவிப புலவரின வேறாய்ப்
45. பிரித்தறி தலேமிகப் பெருநதுய ரநுகும.

கூத்தர் : பிரிததறி தறகும பிறஙகு மொருவழி
கண்டேன் ; அவவணங காலையி லேயே
மண்டல வொற்றரை வரவழைத தவாபால,
"புலவ ரெனவே புறபபடு வோாகள
50. அனைவரு நமதரு கணைநதிட !" எனறே
கட்டளை யிட்டேன் கட்டளைப படியவா
நேரில வநதால, நோமையு மாற்றமும
சூழுவிற கணடு சொலலலா மனறோ ?

நகைமோ சொலலுத லெதறகு ? துணிதலே சாலும.

வேலையர். (கூததரை நோககி)
55 அதுவொழுங காக வமைநதிடு முறையே
புதியா தாஙகள புகலவிழுக களுககு
விடைசொலு முகமே விளககிடு மவாதிறம,
தொடைபல தொடுககுந தொலகவிப் புலவீர் !

வீரத்தேவன் : (தோனறிக கூத்தரை வணங்கி)
புவிககுங கவிககும் பொருநதிய வரசே !
60. குவிததே னிருகை. கொணடாட மொறறரில
ஒருவ னொருசில புலவாக ளோடுதம
காட்சியைக் காணக கடைவாயப புறததில
வேண்டிநிற கின்றன.

கூததா வெருகளி ! விரைவிற
ஈண்டியே யழைத்துவா !

வீரத். தொழுதனன.

(செலல)

கூத்தா (வேலையரை நோககி)
அமைசசே
65. கண்டீா ! உவகைக காட நாடககம !

நகைமோ கண்டேன், ஏனிகளின் காட்சியா மிதுவே

நல்லமுத்து. (ஒருவனோடு வந்த கூத்தரை நோக்கி)
கவிஞா பெரும!இக காட்சி யோடிவா
புவிபுகழ் வெண்ணெய் நல்லூரப் பொருநனும்
சடையப்ப வள்ள றமதுவீட டின்று
70 நடையப்ப வள்ளலாய் நடந்தார். கண்டு,
கட்டளைப படியே யிட்டிங்கு வந்தேன்.

கூத்தா. (போலிப புலவனை நோக்கி,)
ஓ! கோ! நீயாா?

பெருமாள்பிள்ளை. ஒருமு வாளி
போகவே விட்டிடுற் புகழே, மிகநனி

கூத்தா ஆனால, உனக்கே னிவ்வணி யாடை?

பெருமா. 75 வானம வெளளை! விளர்பயி ரிலலை!
குடிககக் கூழிலை!.........................

நகைமோ கொடிதாங் கருபபு!
படுககப பாயிலை! பருவமும போச்சு!
மணவினைப பேசசோ வளாநதிட லாச்சு!

கூத்தா (பெருமாள் பிள்ளையை நோக்கி)
இலையேற் புலவன் வடிவோ வுனக்கு
80 விலையிலாப பொருளாய்க் கிடைத்தது?
(வீரதேவனை நோக்கி)
வீரா!
இவனைக கொடுபோய், இடுசிறைக கூடம!
(கொணடு போக)

நகைமோ. இதுதான் றகுதி யானவேற் பாடாம!
இராப்பகல் பட்டினி கிடபபதை விடவிது
தராசின முனைபோற சறறுந் தவறு
85 திரணடு வேளை யுணவினை யெதிர
றிரணடதோா பரிசில தேடினுற் போலாம.

கூத்தா (நல்லமுதத்தை நோக்கி)
இவனொரு வனேயோ ? இணையிலா வொற்றே!

நல்லமு: அன்றென னரசே! ஆறுபே ரினனும
நின்றனா, வெளியில

கூத்தர். (சினத்துடன)
ஒவவொரு வனைகக
90 கொணடுவா

நல்லமு: (சென்று மற்றொருவனோடு வந்து)
இவனொரு மிணடன நடுதெரு
நாரா யணனொடு போரா டினனமிக

கூத்தா. பொறியி லகபபடு நரிபோற றிகைககும
அறிவிலி! நீயாா ?

ஆறுமுகவேளான். (அச்சத்துடன)
ஐயா! யாரொரு
குசவன்.

நகைமோ: குயவனு ? நான்முகன் றோற்றம.
95 ஆகலின், மாலுடன அண்ணு மலையில
அடிமுடி தேடிய தடியடி யிதுவே

கூத்தர் (வேலையரை நோககி)
அமைசசே! புலமையி னழகினைப பாரும!
(குயவனை நோக்கி)
இமைததிடுங கொடிபோய்! எனனையுன் போக்கு?

ஆறுமுக: பித்தனை யெஙகளைப பித்தனை யாக்கி,
100. வெஙகல மெஙகள் மஙகையா தங்கள்
மஙகல நாணை யுஞ் செங்கையின் வாஙகி
விறறிடச் செய்தெம வேலையின் மணணை
யுற்றிடச செய்த துயர்கவிப புலவீா!

கூத்தர். ஆ! கா! மடிய னறைநதிடு வாயில்
105. வாகாய் அமைநதது.

(வீரதேவனை நோக்கி)

வாராய், வாயிலோய்!
சிறையிற் கொடுபோய்ச் சேர்ப்பா யிவனையும்.

(கொண்டு போக)

நல்லமு : (வேறொருவனோடு தோன்றி)

இறையே! இவனைத் தோப்பிற் கதிரவக்
கோனா ரிடத்திலே, ஆறுப் பொருளைப்
பரிசாயப் பெற்றான்.

கூத்தர் : பழியுடைக் குருடா!
110 தரிசாங் கெடுமதி தோன்றிய தென்னே?

கண்ணன். ஐயோ! பெரியோய! அடியே னெடுநாள்
வையகம் புகழ வருவார், போவார்
பலர்க்கு மயிரா வினை பண்ணியே பிழைத்தேன்.
தலைப்பித் தத்தாற் சடக்கென விரண்டு
115. கண்ணும் பட்டுக் கட்டிருள் போல
விண்ணும் மண்ணும் விளங்கவே யில்லை.
அதனாலே, இப்படிச் செய்தே னறியேன்.
இனிமே லிப்படிச் செய்யே னிறையே;
மன்னிக்கவே யுன்றன் மலரடி பணிந்தேன்.

(வணங்க)

நகைமோ : (கண்ணனை நோக்கி)

120 அடடா! என்பா லறிவித் திருந்தால்
வடதிசை மூலைக் குங் கதிரவனை வணங்கத்
தென்றிசை நோக்கத் திருப்புவன் கதிரவக்
கோனைக்கண் கொடுப்பான்; கொள்ளலா மென்று
போனாய். அந்தோ! புகுந்தது, புலியே

கூத்தர் : 125 ஓ! கோ! நாவிதன்! ஒழுங்கே! ஒழுங்கே!

(வீரத்தேவனைநோக்கி)

சேவகா! இவனையுஞ் சிறையிற் சேர்ப்பாய்.

(கொண்டு செல்ல)

நல்ழு . (இனனெருவனேடு புகுநது)

தககோய் இவனெரு தறுதலை யாவன்,
செககார தெருவிற் சினனையன் செட்டி
இடஞ்சென, "ஞெருகுட மெண்ணெய்
கொடுக்க !
130 இனறேல், வசைககவி யியற்றுவ னுனமேல்",
என்றே மிரட்டி எதிாததான, கணடேன்

கூத்தர் : (போலிப் புலவனை நோககி)

முனனவ னுவிதன முனைநதுமுன வநத
பினனவ னியாா? பெருநதா சுடையோன் ?

நல்லான் ஆமாம, பெரும ! அடியேன வணுணன்.
135. கோமா னுககுக குறியும வருமோ ?

நகைமோ ஆமாம, நினகுறி தவறினு மவர்குறி
போமா றிலலை, புவிமுழு தறியும.

கூத்தர் : என்னே ! என்னே ! இககொடுங் காலம !
நாவிதன ; வணுணன் ! நலமிகு குயவன !

(வீரததேவனை நோககி)

140. சேவகா ! இவனென் றிருமுன னிராமற
சிறையினிற் புகுததுவாய ! விரைவினிற
போ ! போ !

(கொணடு போக)

நல்லமு . (ஒருவனை யிட்டுவநது)

மணியே ! கலவியில், மாநகர்த தஞைசைக்
கணிகை நீலக கணணியின் மனையிற
" கவிககா யிரமபொன கட்டிடு வா" வெனக்
145. கவிபோ லிவனும கலககம விளைததான்.

நகைமோ: ஆ ! கா ! கவிக்கோ ராயிரம பொன்னு ?
ஆயின, இவாமிக அருமையா னவராய்க
கமபா வீட்டுக் கட்டுத் தறியாய்

இருக்கவே வேண்டும் என்னெனிற் புலியிற்
150 "கம்பா விட்டுச் கட்டுந் தறியும
வம்பாய்க் கவிபினை மழைபோற் கொட்டும்",
எனபது பழமொழி யன்றோ?

கூத்தா
கம்பரின.
ஆயிரம் பொன்னீ கேட்டவ ஞரடா?

வெள்ளையனுசாரி :
தாயினும் பெரியோய்! தச்சன் யானே.

நகைமொ.
155 தசசனு? நன்று தசசன! தமிழே!
உச்சமா மிவவிரு மொழிகளுந தகர -
முதலெழுத தினையே முன்னிட்டுக்கொண்டன.

கூத்தர் : ஆகலிற் பொருததமே! சேவகா! இவனையும்
சிறையகங் கொண்டுசெல்! கறைமிக வுடையான்.
(வீரததேவன் கொண்டுசெல்ல)

நல்லமு (வேறொருவனைக் கூட்டிவந்து)
160 வளவாதம் பெரும! வநதிடு மிவனே,
வில்லியா தெருவிற் றொல்லைகள் விளைததுச்
சள்ளைகள செய்தனன், சாற்றற் கரியன

கூத்தர் : கொள்ளைநோ யனையநீ யார்? முன் சென்றவன்
தசசன, நீயோ தட்டான்? கருமான்?

கருப்பனுசாரி.
165 கவிஞர்க ளேறே! கருமான். இன்றெனை
ஏகவே விட்டால், போகே னிபபுறம்.

நல்லமு இறையே! இவன்மிக்க துடுக்கனனெங் களுக்கு
வரையேற நமபோல் வருத்தான் மிகத்துயா.

கூத்தா : அப்படி யா? இவன் அனைவரி னுநதனி
170. செப்படித் தொழிலைச செய்பவன போலும்.
கொடுபோய்ச சிறையாங் கோட்டஞ் சேர்மின்!
(வீரததேவன் கொண்டுசெலல)

நல்லமு. (இன்னொருவனோடு புகுந்து)
கவிக்களி றுகைக்குங் கவுடப புலவீர!
தடிய னிவனகடைச் சங்கம போற்றும
கடிய னென்று கழறியே பலரை
175 வஞ்சித் திட்டே வாயப்பந்த ரிட்டு
விஞ்சியே நின்றனன, வேளாளர் தெருவில

கூத்தர். முட்டாள யார்?

அங்கணர்சாரி: (அச்சத்துடன்)
தட்டான, அடியேன்

கூத்தர்: கெட்டாய்! அப்பாற் சென்றிடு! கேட்ட
உற்றது, புலவ ருறுதொழி லந்தோ!
(நல்லமுத்தை நோக்கி)
180. ஒற்றே! இவனையு மொழித்திடு சிறைக்கு
(வீரத்தேவன கொண்டுசெலல)
சென்றவிக் கள்வனிற் றீர்ந்ததோ?

நல்லமு. தீர்ந்தது

கூத்தர்: நன்றே, "நமது நானிலம் வதியும
போலிப புலவர்கள சிறையிற புகுவர்
பின்னவர் கடாக்களாற் பேதுற லுற்று,
185 நந்நகர்க் காளியி னவராத திரிவிழா
தனனிலே தலைக டறிக்கப பெறுவர்,".
எனபதை நந்நா டெங்கும பறையான
மனபதை யறிய வழுத்திடச செய்வாய்!

நல்லமு: செய்தனன, சிறியேன் திருவடி வணங்கினன்.
(வணங்கிச் செலல)

வீரத்தேவன்: (புகுந்து)
190 மையலின் மணியே! வளவர் பிரானறன
அரண்மனை யமைச்சர் காணவே தங்கள
முரணிலா வேளையை முன்னோக்கு கின்றார்.

கூத்தர்: ஆயின, அவரை யழைத்துவா! நொடியில்.
(வீரத்தேவன செல்ல)

மணிவ : (தோன்றி)
மாயிரு ஞாலம வணஙகிடும புலவிர !
195 வணக்க மிகப்பல இணக்கமாய்த் தந்தனன்

கூத்தர் : அரணமனை யமைசசே ! வாரும எபபொழு
தடைநதது ? மணமு மழகாய், ஒழுஙகாய,
நடநதது போலும.

மணிவ : நனனெறிப் புலவர்
பெரும ! நும வாழ்ததுப பெற்றவிம மணத்தின
200 பெருமையை யென்னெனப பேசுவல்? காலை
வநதேன. வழுதியா பெருமா னெமக்குத
தநதவர வேற்புச சாற்றிடற் பாற்றோ?
வரிசைப பொருளகளின் வளத்தினை யுரைக்கத்
துரிசுடை யென்று தோல்வியுற் றிடுமே.
205 ஆதலில, பெரியோய் ! அடஙகிய முடஙகல
காதலிற் கொணாந்தேன. கடைக்கணித
தருண்மின் !

(ஓலையொன்றைக்கொடுக்க)

கூத்தர் : (வாங்கிப பார்ததுககொண்டே)
யானைக ளெத்தனை ? ஐயா யிரமா !
மானினம் அவற்றினை மடக்கிடும போலும் !
தேரின பாயிரம. இஃதென் ? திரண்மணி
210. யழுததிய வணிகள் ! ஆ ! ! கா ! ! ! இஃதார் ?
பழுத்த முததமிழ் பாடுபுக ழேநதி !
யாண்டுள னன்னோன் ?

(கோலுவினில் நோகக)

மணிவ : ஈண்டினர் வாயிலில.
காண்டகு சிரியோய் ! கழறிய விவையெலாம
ஒபபுவித் திடுமிடஞ செபபிட வேணடினன.

கூத்தர் : 215. வரிசைகள் யாவும் புரிசையிற சேர்த்திடும !
வாய்கொழுப புடைய மனபுக ழேநதியைச
சிறையகஞ செறிததிடும !

மணிமே : சிறையகம்! செய்ததென்?

கூத்து : பிள்ளாய்! பேசிட லாருட னென்பதை
உள்ளாய்! விரைவில, உளறிடல் வேண்டாம!
220 பழமையும் புதுமையும பார்ததுரை யாடு!
கிழமையு நிலைமையும யாராற் கிடைததன?

மணிமே : புவிபோற றரசே! புகன்றவப படியே
தமியேன் செய்தனன, சடுதியிற செல்வல

(சென்றொரு புறமிருககு)

நகைமோ (தனககுள)

இதுவரை யேழு சனிகளே சிறையகஞ
225 சேரநதன. அவறறை யேழரை யாககு,
ஆரநதிடு மிநத அரைசசனி சேரநதால,
ஏழரை யாகும, இலலா விடடால,
ஏழுங கூடி யிணைததிடு மிகுநனி
சேறு நீருஞ சேரநதா லன்றோ?
230 செநதா மரையும வநதிடுந தெளிவே.
ஆயினும, இசசெய லாகா தெனவே
காயினுங குறிபபாயக கழறனங கடமை

(கூததரை நோககி)

(நேரிசை வெணபா)

மாமியொடு போதன் மனைவியொனறுய வீற்றிருக்கட்
பூமியினி லாட்சிசெயும புங்கவனே!—நேமியினில
ஊசியுடன் மற்றொன்று மூசி யுருததெழுநதால
வாசியுறல் யாதாம? வழுதது!

கூத்தர் : சொற்பெருக கதனிற் றுதிததிடு புலமை
உற்றிடு முளங்கவ ரொருபுக ழுடையோய்
235. வாசியி னுடலில வசியிரண டழுத்திற
காசினி யிற்பசி யுற்றோன் கல்வி
பறககலே போலப பறந்திடு மெனவே

பள்ளிப பையனும பாஙகா யுணரும்,
வெளளிடை மலையா விளஙகிய விதனை
240 மதிததிறப புலவர் விதிததிறங கொணடு
மதிததிட வநதவுன மதிமிகப பெரிதே!

(வேலையரை நோககி)

கதிரவ னுச்சியைக் கண்டனன், செல்வோம;
விதியினுஞ் சிறந்த மதிமிகு மமைசசே!

(யாவரும போக, மணிவண்ணன நிறக)

மணிவ (தனிமொழி)

கற்றறி மூடன்! கண்டிடு வெள்ளறையே
245 பறறிடும பெருமபதா! பகரறி வின்றிச
சொறறவிக் சடடனை தோனறிட அறிவுஞ
சிதறிய தெனகொல! சாததிசால தஙகன
கிடடிடு மளவுங கீழபபடிந திவனை
மடடந தடட வழியினைக குறிபபல.
250. அநதோ! கொடுமை! அருமபுல வரைசசிறை
குநதிடச செயலே கொடுநதுயா. ஆயினும,
சிறைககா வலாபாற செபபியே, அவாக்குத
தேவைக ளனைததுந திடடஞ செயது,
காவலன வருமவரை காபபதெனக கடனும்,
255 சேவலங் கொடியோன் றிருவருள நாடியே!

(போக)

(காட்சி முடிகிறது)

# இரண்டாவது அங்கம்

## மூன்றாங் காட்சி

**இடம்:** சோணாட்டுச் சிறைக்கூடம்

**காலம்:** நண்பகல்.

**நடர்:** புகழேந்தி, ஆறுமுகவேளான், கருப்பணாசாரி, கண்ணன், வெள்ளையணாசாரி, நல்லான், பெருமாள் பிள்ளை, அங்கணாசாரி, அறப்பெருஞ் செல்வன்

(ஆறுமுக வேளான் முதலிய எழுவரும் துயருடன் ஒருபுறம் நிற்க)

(நேரிசை யாசிரியப்பா)

புகழேந்தி: (தோன்றித் தனிமொழியாகக் கூறல்)

என்னே! என்னே! இவ்வர சாட்சி!
மின்னே ருலகில் விளங்குங் கொலைப்பழி
கொண்டவாக் கன்றே கொடுஞ்சிறைக் கூடம்?
குண்ட னென்பாற் கண்டதென்? "புதிதாய்
5. வந்திடு மணியம் நந்திடு நெருப்பைக்
கட்டிக் கொளுத்தினன்," எனும்பழ மொழிக்குச்
சுட்டுப் பொருளாய்த் தோன்றிய கூத்தன்
அரச னில்லை யடைதலிற் றனையே
மறந்தனன் போலும் ஆயினும், மதியிற்
10 பொருந்திய கல்வியும் போயது யாண்டோ?
வருந்தியு நேரிற் கண்டிட விழைந்து,
பொருந்தினு னிங்கே! புவியர சதனைக்
குரங்கின் கையிற் கொடுத்திடு பூந்தார்
புரையக் கொடுத்த வரையன் மதியை
15 என்னென்ப புகல்வது! அவன்தா னென்ன
செய்வான்? புலவரிற் சிறப்பனுந் தனது
கைபோல் பலனுங் கல்வியா சிரியனு
மாகிய விவனை யன்றியே யெவரை

அரசக் கட்டிலி லமாத்துவன் அனறியும,
20 உரைசெயி ஓழவினை யூட்டிய படியே
புரிநதனன கூததன பொலலொரு கவசபால
ஒதிடற் சாலவு மொனறு தகதோ!

(ஆறுமுகவேளான் முதலியோ ரிருக்குமிட நோக்கி)

என்னை யன்றி, இச்சிறை யகததே
இன்னுஞ் சிலரு மிருககின் றனர்போற
25 காண்கிற தையோ! அவர்களுங காட்சியின்
மாண்புடை மக்களாயக் காணகின றனரே!
இவாகளு மென்னைபபோற் றெளிவிலா னியற்றும
தவறுடை யாட்சியாற் றடுக்கப் பட்டனர்
போலும அவாகளை நெருங்கிப புரிகுவன்.

(அவாகளை நோககிச செலல)

ஆறுமுக (மறறவாகளை நோககி)

30. அணணன மாாகளே! அதோ பாருஙகள!
கணணனை நிகாதத காளைய ரொருவா
நமைபபோ லிஙகு நணணினர் ஆனால,
உண்மையிற் பெரிய வொருகவி போனறே
திண்மையாம பாாவை செப்பிடல் காண்மின்!
35. அவரு நமையே யண்மிவரு கின்றார்.
கவரு மெழினடை காணுந தோறும்,
அனபும நண்பும அகததிடை முளைததே
இன்பா மவாமொழி கேட்பதற் கெனசெவி
விழைநத தவருடை மெல்லரு ளுகககம்
40. பழைமையா நண்பரைப் பாாபபது போன்றே
இருபபதைக் காண்மின!

(புகழேநதி நெருஙகி வர, அவரை நோக்கி)

எமபெரு மானே!
வருக! வருக! வணஙகினோம, நுமமை

(எழுவரும வணங்க)

புகழேந்தி. (எழுவரையும் நோக்கி)

வணக்க மிகப்பர இணக்கமா முமக்கே
தந்தனன் தவானி நொந்திடு முள்ளத்தீர்!
45 நன்முகக் குறிப்பு நன்மைசான் மொழியுஞ்
செம்மைசால் பணிவுஞ் செறிந்திடு முங்களைச்
சான்றோ ரினத்திற் சார்த்திறற் கரியாய்,
ஊன்றியே கூறிட, ஒடுங்கிய சிறையகஞ்
சேர்ந்ததென?

ஆறுமுக பெரியீர்! சிவபெரு மானே
50 நேர்ந்தா லொத்த நேர்மையீர் தாமே
இவண்புக நேரின, எங்களை யொத்த
சவங்களி னில்லைம சாற்றவும் வேண்டுமோ?

பெருமா கலைமகள் படிந்த காட்சிவிட் டகலா
நிலைகொ ளுக்க நோத்திமை யுடையீர்!
55. திருவுளங் கருதிய வண்ணமே சிறியேம்
பெருமையி லொருசிறி துடையேம், ஆயினும்,
வயிற்றின் கொடுமையான மதியினை யிழந்தேம்.

புகழேந்தி: வயிற்றின் கொடுமையா? அதனால், வழிப்பறிச்
செயனோர்ந் ததுவோ?

வெள்ளைய: சீ! சீ! அப்படிச்
60 செயவிலை பாழுங் கருப்பா லகவிலை
ஏறிட வெங்கள் பிழைப்பெலா மிழுக்கி
மாறிட லானது.

புகழேந்தி: மாறிடல்! என செய்தீர்?

கண்ணன்: செய்ததென்! தீங்காஞ் செயலொன் றுமின்று
உய்வினை வேண்டி யுண்மையி லறிந்த
65. கலவியைக் கொண்டு குடிகளின் கடைதொறும்
பல்வினைக் காட்டிப் பலமொழி பகர்ந்தே
"ஏற்ப திகழ்ச்சி," எனுமொழி துறந்தே
ஏற்கத் தொடங்கினேம். இதுதா னெஞ்செயல்,

நல்லான் ஆமாம, ஐயா! அதுநா னெஙகளைத்
70. திருட்டுப புலவனுஞ செயலினிற சேர்ததே
உருட்டிய திநத வொருபெருஞ் சிறைக்கே.

கருப்பனு. சிறையுடன் றீர்நதாற றெமபுட னிங்குக
கிடைககுங் கஞசியைக் கேடொன்று மின்றிக்
குடிததே குடிசையிற் கொல்லும் பசி,பிணி
75 அடுத்திடா திருப்பேம் அங்ஙன மன்றி
நவராத் திரியிலே நம்மூாக காளி
கோயிலி லெமமைக் கொண்டுபோய் நிறுத்திப
பலியிடத துணிவாம் பலிககுமுன் னுங்கள
கிலிகொளக் கேள்விகள் கேட்கப் படுவெமாம.
80 விடையிறுப பவாகள் மீள்வராம் மற்றோர்
படையிறை றுணிக்கப படுவராம். எஙகளைக்
காபபது கடவுடன கடமையாம்; பெரியோய்!

புகழேந்தி. (தனககுள)
இஃதென கொடுமை! இயமபொணுப் பழியே!
அஃதைகள! அநதோ! அடாக்கொடுங்
கொலைச்செயல்!
85. "நரிககுப பட்டங் கட்டினுல், நாட்டில்
வரிககுமேல, கிடைக்கொரு வாருடை
வேணடும,"
நடைபோ லன்றோ கூத்த னுட்சி
நடைபெறு கின்றது? நாமிவ னுக்குப
படிபபினை யொனறு புகட்டியே படிநத
90 தடிபபினை யொழியத் தடிநதிடல் வேண்டும்.

(வெளிபபடையாய்)

உடற்பிறப் பனைய வுயர்நட் பாளாகாள்!
கடமையை முடிததவே கடவுள ரென்னை
அனுப்பின ரிங்கே. அலககண் வேண்டாம்
பனுவல் பலவறி பணபுடை யோனெனக்
25. குறுமபுகள் பலசெய் கூதத னும்மை

ஏறுமபின மெனவே யெண்ணினன் போலுாம
ஆயினும, அவன்கருத தழிவது திணணம
பாயிரம பலவென் ? பாண்டிநன் ஞீட்டின
அரண்மனைப புலவனை யறிவிரோகொல ?

**கண்ணன்** ஆ! கா!

100 அறிவோம். அவாபெயா புகழேநதி யனரே?
கல்வியிற் பெருஙகடல! காட்சிக கெளியா!
நலலறி வினிலோ நலமிகு வியாழன!
ஆனால, கேரி லறியு நலவினை
தேனூர் மொழியீா! செயதோ மிலலை.
105 அன்னூர் தமமை யறியுமோ திருமுன ?

**ஆறுமுக** (கணணனை நோக்கி)

அணணல்! இவரே, அவரென் றெனககோா
எண்ண நணணிய திவரே யவாகாண!

(புகழேநதி முகத்தைப பார்ததுக் கொண்டே)

கணணு முகமுங கருததிடை யுளளதைப [சித
பளிஙகுபோற றெரித்திடல பாாமின்! புகாச
110. தெளிவே முனனர்ச் செப்பிய தயாததேன!

**அஙகண(** அபபடி யாயின், இபபுகழ் மலையே
எபபடி யுஙஙமைத தபபிட வைக்கும

**புகழேந்தி** ஆமாம, யானே அபபுக ழேநதி.
ஏம முறுவீர், எணணம் விடுமின்!
115. நவராத் திரிவிழா நணுகிட வினனும,
நவமா நானகு நன்மதி வேண்டும.
அதறகுள், நீவிா, அரும்பாடு படடு
மொழியியல் பொருளியல் பாவியன் முறையே
தெளிநதிடல வேண்டும ஒழிநதிடு துநதயா
120. ஒடடக் கூததனை யுலகெலா மறிய
மட்டந் தட்டி மடக்கலாம, மதிவலீர்!

பெருமா : ஐயமென்? தங்க ணுண்மட் டுண்டேல்,
பையவிக் கூத்தனைப் பற்றவே யடிப்பேம்
வேண்டா மரையாள் விரும்பிவந் தடையும்
125. தண்டமிழ்ப் புலவீர்! தாங்களு மிங்கு
வந்திட நேர்ந்ததென்?

புகழேந்தி : வளவர்கோன் வாயிற்
புலவனா யிருக்கப் பாண்டியன் புகன்ற
நலமொழிப் படியே நண்ணின னின்று
கெட்டகா லத்தாற் கெடுமதி பூண்ட
130 ஒட்டக் கூத்தன், உங்களைக் கட்டை
போக்குதல் விரும்பிய போதனை யாற்ற
போக்கினன்; சிறையில். புகுந்தனன், வந்தேன்.

அறப்பெருஞ்செல்வன் : (தோன்றிப் புகழேந்தியை நோக்கி)
ஒப்பிலாப் பெரியோய்! உண்டிட வுணவு
செப்ப மாயிற்று. திருவுளம் புரிந்து
135 கொண்டிட வேண்டினன்.

புகழேந்தி : கோதிலா வட்டில்
கண்டிட யாண்டு?

அறப்பெரு : கவிஞர் மணியே
தென்பாகத்திற் றிகழ்ந்திடு கின்றது.
அன்பா யடியே னழைத்துச் செல்வல்.
எழுந்தரு ளிறைவ!

புகழேந்தி (மறவர்களைச் சுட்டி)
ஆனால், இவர்கள்?

அறப்பெரு : 140. பின்னு லழைக்கப் பெறுவர்.

புகழேந்தி : அம்மதன!
நன்று வலரிவர் நலிந்திடப் பசியால்,
முன்று ணுணவுணன் முனனேன். அன்றியும்,
இவர்களு மென்னைப்போ லெல்லா விதத்திலும்
முறையே நடத்தப் பட்டா லல்லது

145. பெரியோய்! உணவுறும பெறறியிங கிலலை

அறப்பெரு: அரியோய்! அஙஙனஞ செயயக கட்டளை
இலலை என் செய்வன?

புகழேந்தி: எவரது கட்டளை?

அறப்பெரு மலலிகா கூதத மனனவ ரதுவே

புகழேந்தி மன்னவ னவனா? மறநதனை மிகுதியும.
150 ஒட்டககூதத னெனவே யுரைததிடு!
கெட்டனன, அவனு மெனைபபோற
கீழமையாம
இசசககம பேசும பசசைப புலவனே
அரசன வநதபின, அவனிலை யறிவன.

அறப்பெரு இருககலாம! ஆயினும, எளியேம, யாரும
155 தலைமையாய வநதால, அவாகளே தலையாயக
கொணடிட வேணடும, கும்பிடல வேணடும
அன்றெனிற பிழைபபு நின்றிடா தகனும.

புகழேந்தி ஆம, அது வாய்மை ஆயினும, இவாகளை
ஆமவகை நடததியென் றேடவே யமாததின
160. வருஙகே டொன்று மின்றும. முடிவிற
பெருமபுக ழடைவாய். பேதாய! என்மொழி
நோமையாம, நமபு!

அறப்பெரு· நிலநதிகழ் புலவீா!
அபபடி யாகுக! ஆனால, என்னைக
காட்டிக கொடுத்திடல! கழகமாா பொருளே!

புகழேந்தி:
165 காட்டிக கொடுபபதா? கழறினை நனகு!
செய்நநன்றி கொலலுஞ் சிறுமக னீஙகிலை.
(மறறவாகளை நோககி)
செல்வோம, யாவருஞ் சீரிதே;
கல்வியின் செல்வி களிப்பினை யெய்தவே.
(யாவரும் போக)

(காட்சி முடிகிறது)

# இரண்டாவது அங்கம்

## நான்காம் காட்சி

இடம் சோணாட்டுச் சிறைக்கூடத்தி னருகுசார்.

நடர் புகழேந்தி, மணிவண்ணன்.

காலம் மாலை

(நிலைமண்டில வாசிரியப்பா)

புகழேந்தி (ஒருபக்கம் அமர்ந்து)

"வகுத்தான் வகுத்த வகையலாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரி" தெனும்
பொய்யா மொழியினைப் புகரி றுறவியும்
மெய்யாகக் கொண்டிடல் விதியெனிற் சிறியேன்
5. கையா றுறுவது கழிபெரு மடமையாம்.
அன்றியும், இறைவ னழகுற நடத்தும்
மின்றிகழ் செயலெலாம் விளங்கிடு பல்லுயிர்க்
குறுதி பயப்பன; அன்றியோ ரணுவும்
இறுதி பயப்ப இலையே. சிலசெயல்
10. வீணென மதிப்பதும் வெளிறுகொ ளறிவே
பேணிய மெய்யறி வாகுங் காட்சியைப்
பெற்றோர்க் கனைத்தும் பெரும்பய னுற்றே
விளங்கிடும்.

மணிவ : (தோன்றி)

செந்தமிழ் வியன்பெறு செல்வி
களங்கொளுங் கலித்தொகை நற்றிணை யகம்புற
15. நானூ றமுத னற்றமிழ்ச் சங்கப்
பேழையி லுற்ற பெரும்பணி யனைத்தையும்
நாவாங் கைகளா னலமுற எடுத்துப்
பூவாம் பெரியதோ பொருட்காட்சி நிலையில்
வைத்தே மகிழ்ந்திடும் மெய்த்தமிழ்ப் பெரியீர்!

20 'வாழ்க! நீடு வாழ்க!' எனவிறை
சூழ்கழ றெழுநனன் சுகமே போலும
குறைவெது முண்டோ? குறுமுனி யனையீர்!

புகழேந்தி: அறிவாற பெரியீர்! உறுகுறை யாதும
பெறுமா றில்லை. பெயரள வனறிச
25. செயலா லரண்மனைத் தோற்றமாச சிறககும
உயிலினைக கொணடதிவ வொருபெருஞ் சிறையே

மணிவ: ஆயின், எஙகனு மறியொணு வியபபே!
தாயினு மனபுடன றையலார வளாககும
கிளிகளை கூடடினைச் சளிலயில் வையகம
30. 'என றது போனறவோ ரிறுமபூ தாமே!

புகழேந்தி "கலககம பிட்டுக காடையை வளாககினும
கலககமுள நெஞசங காட்டினில வைகும,"
என்பது வாய்மையே. எனினும, இச சிறையினை
மன்பதைக குரிய வலலோன கட்டளைப
25. படியே வொட்டக கூததப பட்டனின
கொடிதா நெஞசக கோட்டையை யிடிகக
வேணடுங கருவிகள விளஙகிட வேணடிய
கொலலுலைக கூடமாய்க குயிற்றிட வநதனன.
நலலவாக குயிரைபு நலகிடு மணியே!
40. ஆகலின, இதுசிறை யன்றெனக கருதுவீர

மணிவ நெஞசக கோட்டையா! யாதது? பெரியீர்!

புகழேந்தி பஞசக கொடுமையாற் கஞசியை வேணடி
நயமொழி பகாநதே யிரநதிட, 'நயமிலாப
போலிப புலவர் சிறையகம புக!' எனக்
45 கோலிச் செலுததக குறையறு மெழுவா
வநதிவண சோநதார், மாணபுடை மக்கள்!
நொநதிடு மவுரை நுவன்றவெண மதியன
கலவிச் செருககாற் காளியின் றிருமுன்
கொலவித திடவே குறிததுளான்; கொடுமை!
50. இக்கொலை நவராத திரிவிழா வன்றும.

தககோ ரவரை யதனமுனர தருஙகலை
மிககோ ராககி, யினை மட்டர
தட்டும பணியே தாழ்சிறைக் கூடா
கொட்டுங கொல்லுலைக் கூடமாய் மாறறிட
55. லானது

மணிவ : ஓ! கோ! அழிமபன்! பழியொடு
மானமில் புலவினை மாக்களிற் கொலவினை
கொண்டனன் கொல்லோ! குவலய மதனிற்
கண்டிடும பலவுயிர காட்சிசா லுடம்பிற்
பொருந்திடு மருமையும, புரையறு முதல்வன்
60 திருநதிட அவற்றினைச செலுததது முறையும்,
மறத்தொழி லதனன் மாற்றுமோ ருயிரை
அறதமொழி லதனு னுக்கற் கியலா
மாநதா நிலையு மடயன் கற்ற
தீந்தமிழ மொழிதரீன் றெரிததிட விலையோ?
65 அரணமனைத தோறறமா யமைநதவிச
சிறைபின்
பரணமிகு கொல்லுலைக கூடப பண்பாய்
மாறுவ தெங்ஙனே? வளாகவிப புலவீர்!

புகழேந்தி வீறுடை மனனாகண் மெசசிடு மமைச்சே!
கோட்டை யரணும. அதனைக கொல்லும
70 கூடம் மனையாம. ஆகலிற கூததன
நெஞசக கோட்டையை நீறதாப போக்கும்
தஞ்சமா மிசசிறை தகுமரண் மனையாம.

மணிவ : செஞசொற் புலவீா! செபபிய தொவ்வும.
வஞசகன கோட்டை மடிநதிட னலமே

புகழேந்தி 75. நலமொன் றேயோ? நற்பே ருலகை
ஆட்டு மலகையை யோட்டிய தாமே
ஆகவே, நீவிா, அதறகின்றி யமையாக
கருவிக ளுதவக காவற றலைவனும
பெரியோற குணாததுதிா, பேரற மணியே

மணிவ : 80 அஙஙனஞ செய்வல, அகததியம அரசனும
திங்களுனை கிற்குட டிருமபுவன். அவன்முன
கவிககளிற் றினேயே புலிககளி ருககி,
மாவுத்த ஞெருவனை மததகத தேற்றிப்
பூவுல கறியப பொன்னம பாரிவைத
85 துலாபபுறப படுவம "ஒங்குசீர் மிகுநத
கலைமகள் வாழி! கவினபுக ழேநதி,"
என்றே வாழ்த்துவம

புகழேந்தி : இறைவனி னருளால்
நன்றே யாறறுவம, நானில மகிழவே

மணிவ. ஈவதை விலககி யிருளுசிறை யிட்டதுர்த்
90. தேவதை யாகிய கூததன செயற்குக
கூலியே கொடுபபம. கொடுமையே! சிறையா
வேலியிற் பட்ட மேதைக ளெழுவரும
யாண்டுளார்? அவாகளை மீணடிட வேண்டினன்.

புகழேந்தி : படுக்கை யறையிற் றுயின்றனர், இடுககண
95. மிகுதியும பட்டனா; தகுதியா மிவாகள்
உணவினைக கணடே நெடுநா ளொழிநதன,
எனநினைக கினறேன் எழுமின்! சென்று,
காணகுவம, இரககக் காட்சி சிறக்கவே

(இருவரும போக

(காட்சி [illegible])

# இரண்டாவது அங்கம்

## ஐந்தாங் காட்சி

இடம் : சோணாட்டுச் சிறைக்கூடத்தின் மற்றொரு சார்.

நடர் : புகழேந்தி, ஆறுமுகவேளான், கருப்பணாசாரி, கண்ணன், வெள்ளையணாசாரி, நல்லான், பெருமாள் பிள்ளை, அங்கணாசாரி

காலம் : பிற்பகல்

(ஆறுமுகவேளான் முதலிய எழுவரும் அடக்கமா யொருபுறம் அமர்ந்திருக்க, அவர்கட்கு முன்னே புகழேந்தி யொரு முக்காலியில் வீற்றிருக்க)

(நேரிசை யாசிரியப்பா)

புகழேந்தி

மாணவ மணிகாள்! சென்றநாள் மதியிற்
காணவே விளக்கிய கவின்மொழி வகையாம்
இயற்சொற் றிரிசொ லியல்பாம் வடசொல்
திசைச்சொற் பகுமொழி பகாமொழி திறலார்
5. பெயர்ச்சொல் வினைச்சொற் பிறங்கு மிடைச்சொல்
உரிச்சொ லிடுகுறி காரண முயர்வாம்
குறிப்புட னாக்க மரபுங் கூடக்குறி
இலக்கண முடைய திலக்கணப் போலி
மரூஉ-வோ டடக்க ரடக்கன் மங்கலம்
10 தொகைதொடர் புணர்ச்சி முதலாந் தொல்லியல்,
அகம்புற மாகு மப்பொருண் முறையும்
விரித்துமே யுரைத்தனன், விளங்கிட,
தரித்தனி ரன்றோ? தண்ணொளி மிகவே. (க)

ஆறுமுக

தரித்தோம், நன்றாய்ச் செரித்தும் கொண்டோம்.
15. அமிழ்தினை நிகர்த்தநந் தமிழ்மொழி யதனிற்

சொறகளொவ வொனறின றாயமையுந
தோறறமும
கறகண் டிணையுறழ காடசியுஞ் சுவையும,
புறககா ழுடையன புலலென மொழிநது
புலலறி வெனுநதொடா புலனுற வைததலும்,
20. கலவி யெனுமொழி கருதிய பொருளைக்
கணழிடு முறையை விண்டிட நடததிச
செலுததிடு சீாமையுந தெளிநதனம.
உலுததர்கட்சகபபடா வொருபெரு மணியே!
(உ)

பெருமா உறுதிப பொருளா மொருபெரு நான்கினை
25 அறுதியிடடுரைத்தவகப்பொருள புறப்பொருட்
போககினை யுணாநதே பொனறுதல
நீககினம; நோமையி னெடுமா லணையீா! (ந)

அங்கணன் அனபே சிவமென வறிநதநம பெரியாா
அனபினை முறையே, அழகாய, நிலையாய
30. இன்பினொ டெய்த வியறறிய வகபபொருட
டுறைகளை யடியேன் றுவனறிய வேழு
பிறபபினு மறவேன் , பேதுறும
இறபபினு மறவா தெனனுடை நெஞ்சே (ச)

கண்ணன் கநதழி நிலையுங கவினுமப பெயாதான்.
35. வநதிடு முறையு மனககண
தநதென் பெயரைத தகுதியாக கினவே (ரு)

புகழேந்தி தமிழ்ததா யினையே சாாநதவா கண்ணிணை
மட்டுமோ பெறுவா? மறறெலாப் பொறிபுலன்
கடடுரை யாகுங் கவின்பெறு முடனுடன்
40. பெறறிடல தகவே பேரறி வுடையீா!
சற்றெனை நோககுதிா! சாாநதிடு பாவியன
முற்று மொழிகுவன். மொழிநதன வெல்லாம
உயிராம. பாவிய வுடலாம. உடலின்
கூட்டமு கிடையா வாவி கூரறி
45. வோட்ட மின்றி யொள்ளிருட் பிழமபிற

கிடப்பது போன்று, பாவியன் முறையே
நடப்பது தெரியா நானில மாந்தர்
மடத்தனந் தானே மயங்கியே நலிவர்
பாவிய றெரிந்தும் பாடுதற் கியலாப்
50 புலவர்க ளில்லைமை விலையிலாப் பகராம்.
“ காரிகை கற்றுக் கவிபா டுவதினும்
பேரிகை கொட்டிப் பிழைப்பது நன்(று),” எனத்
தோன்றிய பழமொழி, ‘ வறிதே யாப்பியல்
கற்றதல் வலுவான முற்றும் பாடுவோம்,’
55 என்றே கருதி, நன்றே வருந்தி
இளைத்தவர் கேட்கக்காம் ஆதலின், நீவிர்
சளைத்திடு முன்னம், பாவியற் கற்று,
கூறுவன பாச்செய்யு முறையைக் குறிப்பால்
பாக்களி னுறுப்புப் பகுப்போ ராறும்
60 அவற்றுள் முதலெ ழுத்தாம். அவ்வெழுத்
துயிர்பன் னிரண்டாம்; மெய்பதி னெட்டாம்
உயிருட் குறுகிய வோசை கொண்டன
குறிலா மைந்தும் ; நெடிய வோசை
கொண்டவோ ரேழுங் குறைவிலா நெடிலாம்.
65 இவைமெய் பதினெட் டுனிலும் பரவத்
தோன்று முயிர்மெய் தொகுமுயி ரைந்தும்
எனறிடு மெய்யாற் றொண்ணூ றெண்ணம்.
அவற்றொடு குறிலுயி ரைந்தினைச் சேர்க்கத்
தொண்ணூற் றைந்தாங் குறிலெனத்
தொகுப்பீர்.
70 நெடிலோ ரேழு மவற்று ணிறைந்த
நெடிலுயிர் மெய்யவை நூறுதலை யிட்ட
இருபத் தாறு மிணைந்திடத் தோன்றும்
ஒருநூற் றுமுப்பத் தொருமூன் றினையும்
நெடிலெனக் கொள்வீர் நின்ற விரண்டாம்
75 உறுப்பினை யோதுவன், கருத்தினி லுணர்வீர்
அசையது, அவ்வெழுத் தொன்றும் பலவும்
இசைவதாற் றோன்றும். குறிலும் நெடிலும்
தனித்துநின் றேனும், தமராம் மெய்யுடன,

தனித்துநின் றேனுந் தழுவுந் நேரசை,
80. 'வாழி, வேண்டன,' எனவருந் தொடரிற்
பாழியந் தோளீர்! பகாக்குறி னெடிலும்
தனித்துமொற் றடுத்துந் தயங்கிடல் காண்மின்!
இனித்திடு நிரையசை யிணைக்குறி குறினெடில்
வாளா வரினும், வளாமெய் யுடனே
85 கேளாய்ந் தொடரினுங் கிடைக்குமற் றதுவே.
'குகனமோ, மயிற்படாம்,' எனத்திகழ்
மொழிகளில்
அகவிய குறிலிணை, குறினெடி லவைதனி
நாமே நின்றும், தகைவிலா வொற்றுடன்
ஆமா றடைந்து மசைதலை நோக்குமின்!
90 நந்நாவகு வழியாய் நடக்குமிவ் விரசை
ஒன்றும் புலவு மொருங்கி யிசைந்தே
ஓதுமு டிந்த வோசையாற் சீர்பெற்
றிரப்பது சீராம், நேரசை தனித்து
நின்றிடு நாளாம், நிரையசை மலராம்
95 இவ்விரு சீரு மிணையறு வெண்பா
இறுதியிற் பெரும்பா லிற்றுச் சிறுபால்
அம்போ தரங்கக் கலிப்பா வகத்தும்
வஞ்சிப் பாவினம் மருவியும் வருமே
சொற்றவவ் விரண்டசை தம்முளொன்
றோடொன்
100. றுற்றிடத் தமுட்டாமும் பிறவுங்
கலத்தலா னகுசீர் காணலாம், அவற்றை
இயற்சீ ரெனவே இயம்புவர் பெரியர்
நேர்நேர், தேமா, நீள்வேல்; நிரைநேர்,
புளிமா, நிணவேல், புகரில் நிரைநிரை,
105. கருவிளம், திருத்தணி; கவினார் நேர்நிரை,
கூவிளம், வானமயில் எனவே கூறிய
முறையே யியற்சீர்க் காட்டினை முன்னுவீர்
இச்சீர் நான்கு மியற்பா வாகிய
அகவ லகத்தே யகவியே நிற்றலான
110 [illegible]

இயற்சீர் நான்கி னிறுதியி னேரசை
புணர்வதால், நேர்நேர் நேர்,தே மாங்காய்,
கந்தன வேல், நிரை நேர்நேர், புளிமாங்
காய், கடி மாவேல், நிரைநிரை நேர், கரு
115 விளங்காய், கடிமயின் மேல . நேர் நிரைநேர்,
கூவிளங் காய், வேல் மயிலான் ; குறித்தவிம்
மூவசைச் சீரக ளான்கு முதற்கண்
கண்டிடு வெண்பாக் கவினுரிச சீராம் ;
காய்சசீர், வெண்சீ ரென்றுங கழறுவர்.
120 கனிசசீர், பொதுசசீ ரெனவே கழறும
சீரகளைப் பின்னாச செபபுவல் சீருறு,
தளையவை யேழாம தகக அவற்றினில
இரண்டினை விளக்குவல் இயற்சீர் வெண்டளை
• வெணசீர வெணடளை யெனவவை விளங்கும்
125. வெணபா வினிலே விளக்கிமுற் கூறிய
ஓரசைச் சீரு மீரசைச சீரும
மூவசைச சீரு முன்னுற வருமே.
வருங்கா லொன்றினே டொன்று மயங்கும
முறையே தளையாம தேமா, புளிமாச்
130. சீரமுனம நிரையசை முதலிற் சேரும
சீரும, கூவிளம், கருவிளச சீரமுனம்
நேரசை முதலிற பொருநதுஞ் சீரும்
புணரின், இயற்சீர் வெணடளை புணரும
வெண்சீர முன்னர், நேரசை முதற்கொள
135. சீரவரின், வெண்சீர் வெண்டளை சிறபபே.
ஐநதா முறுபபடி யாமே. அவவடி
ஐநது வகையதாய் முடியும. அவற்றுள,
வளமார சிநதடி யளவடி மதித்திடின்,
முசசீர, நாறசீர கொண்டிடு முறையே.
140. ஆறு முறுபபி னகலம விரிக்கின
ஏழா றுனறு மிணையுறு தொடையே. -
அடியினுஞ சீரினு முதலெழுத தொன்றும
மோனைத தொடையும, முதலெழுத் தளவொத்
திரண்டா மெழுததொன் றெதுகைத் தொடையும

145 தெரிபின் மற்றைய பின்னர்த் தெரிப்பல
பாவின் வகையைப் பகரின், நன்கே
ஆமவை முதற்க ணடுப்பது வெண்பா
குறளெனும் வெண்பா, இருகுற ணேரிசை
வெண்பா, இன்னிசை, சிந்தியல், பஃறொடை
150. வெண்பா வெனவே விளங்குமற் றதுவே
விளங்கிடு மவற்றுள், வெண்குறண் முதற்கண்
நாற்சீர் கொண்ட அளவடி கொண்டு,
முச்சீர்ச் சிந்தடி பின்னர்ப் பெற்றே
ஓரசைச் சீரி னிறுதி யொடுங்கும்,
155 முன்னர்க் கூறிய வியற்சீர் வெண்டளை,
வெண்சீர் வெண்டளை கொண்டிடல் வேண்டும்.
மோனைத் தொடையா முதற்சீ ரொன்றுஞ்
சீர்முன் னெழுத்துத் திகழ்ந்திட வொத்து
முடிவதும், அடிதொறு முன்னெழுத் தளவொத்
160 திரண்டா மெழுத்தொன் றெதுகை பெறுதலும்
இரண்டடித் தொடுக்குந் தொடையாம் இவற்றை
மனனுறக் கொண்டு மற்றைநாட் காலை
திவாகர னுதிக்குமுன் றுயிலது தெளிந்து
வள்ளுவ ரருளிய வள்ளுவப் பயனில்,
165. நற்றவப் பயனு நலமிகு தொடர்களில்,
"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்," என மொழியுந்
தொடரினைப் பன்முறை துகளற வோதி,
நடையுற நாவினி னன்குறப் பயின்று,
170. கூறிய விதியெலாங் கொண்டிடல் கண்டு,
வீறிய நாவின் விளங்கிய விசைகொடு
மாற்றியற் குறளினை வழுத்திட
ஊற்றிய னீரினை யொப்பவந் திடுமே (௯)

நல்லான் : கடன்மடை திறந்தெனக் கழறிய விவையெலாம்
175 திடமுட னறிந்தனம் செப்பிய படியே
செய்குவோம். சேண்பொழு தின்று சிறியேம்
உய்குதற் குதவிய வொருபெருந் திருவே!

புகழேந்தி . ஆமாம, நானே பறைகுவன் மறறவை
ஏமமாய்க கூறின விதயத் திருததுமினே!
180. வாமமாந சிலைகள வளரருள்
நாமனை வருநகொள நாடடினிற் றுனே (௭)

(யாவரும் போக)

(காட்சி முடிகிறது)

(இரண்டாவது அங்கம் முற்றும்)

# மூன்றாவது அங்கம்

## முதற் காட்சி

இடம் : சோணாட்டுச் சிறைச்சாலைக்குப் பக்கத்துத் தெரு

நடர் குலோத்துங்கன், ஒட்டக்கூத்தர், கம்பர், புகழேந்தி, நகைமொழிநாவலன், ஆறுமுகவேளான முதலிய மாணவர்கள், மந்திரி, படைத்தலைவர், யாழ்ப்பாணர் முதலியோர்

காலம் மாலை.

(புகழேந்தியும் மாணவர்களும் சிறைக்கூட மேற்றளத்தினின்றும் வேடிக்கை பார்க்க)

(நிலைமண்டில வாசிரியப்பா)

புகழேந்தி:

அன்ன மாவி னன்னிலை கைக்கொள
மாணவ மதித்திறம் வாய்ந்தநற் புலவீர்!
காணவே யெளிதாய்க் கவினுறத் தோன்றுமித்
தெருவழி நோக்குமின்! தேமா விலையொடு
5 வாழைநற் கமுகின் வாங்கிய குலையும்
செவ்விள நீருந் திகழ்சடிப் பகையும்
கூந்தற் பனையின் கொழுவிய பாளையும்
தூக்கிய தோரண வாயிலும், பூரண
கும்பமும், பாலிகை கொண்டநல் லெழிலும்,
10 செம்பொன் ஞெவெனத் திகைக்குநற் றூண்களும்
உம்பரோ விவரென வம்புறு மாந்தர்
சிந்தையின் மகிழ்ச்சியைத் தேக்கிடு முகமும்,
சந்தார மடந்தையர் தவளநன் னகையும்,
பாரில மக்கள் வாழ்க்கைக் குயிராம
15 மேனில மன்னன் விடுத்தநற் றுணையெனும்
நானிலக் காவலன் நற்பெருந் தெய்வம்
தமக்கெனக் கொண்ட தணிவிலா வரச

அனபினை வானக மடைநதன மதியென
இனபுற விளககு மெழிலினை யுணாமின் !

பெருமா 20 கற்றோா மணியே! கவினகுலோத் துஙக
நற்றவ வள்ளல, நாடபல இரவியின்
றோறற மினறித் துலஙகுநன மதியும
ஆற்றவுஞ் செறிநத வழிபெரு முகிலான்
மறைந்திட மிகுபனி வாடைப்பன் னோய்கள
25 அடைந்திடத் துன்பத தமிழ்நதிடு மக்களை
நிகர்நதவிவ் வுறையூர் நெடுநகா மககளின்
அகததினிற் பருதியா யமர்ந்துநற் காட்சி
கொடுககுமிவ் வேளையிக குதூகல மாட்சி
யடுபபது ககவே

(ஒட்டககூததா, கமபர், வேவலயா முதலிய மநதிரி பிர
தானிகள் குதிரை மீதேறிச் சூழ்நதுவர, குலோத்துங்கன
யானைமீத பவனிவர).

அங்கணன் : அஃதோ! காண்மின்!
30 உதயமா கிரியிடை யுதிததிடு கதிரென
மதமா மிசையே வதிதரு துஙகன்
பசசைப புரவிசூழ பவனியின் சிறப்பை.

(குறளவெண் செநதுறை)

யாழ்ப்பாணர் :

௧. காாமா மிசையே தோனறிடுநற்
கவினுா பருதி தனைநிகர்த்துப்
போாமா வயஙகக் கைமமாவிற்
பொலியுந் துஙகன் சிறநதிடவே.

௨ திகிரி யெடுதது வானபுககுச்
செழிதத கற்ப தருவினொடு
மகியே சிறககச சாதமெனும்
வலலி கொணாநத கண்ணனையே,

௩. நிகாததுத தெனறு டேபுகுநது
நிகரில கற்ப வல்லியெனும

அகத்தைக் கொண்டாந்த பெருவாழ்வே!
அழகாய் வாழி! வாழியவே!

முந்நா டதனிற் சிறந்திடுநன்
முளரிப் பொய்கை நிறைபதியாம்
நன்னாட் டதிபா! நாயகமே!
நாளும் வாழி! வாழியவே!

௫ சோழ வளமா நாட்டுவே
சோறுடைத் தென்று துதிபுலவர்
வாழும் பெருமா நாட்டிறையே!
வாழி! நாளும் வாழியவே!

ஆறுமுக: ஆ! கா! அரசனு மிதோவரு கின்றனன்.
மாகா திபாநிலை வாய்த்தநாம், செவ்விதே
35 மேற்றள்த தமர்ந்து வீரனின் முகத்தருட
காற்றது வீசுக காணும் பெருமை
அமரா விணைகத தமாந்தும் பொருந்தார்

(குலோத்துங்கன் பவனியோடு சிறைச்சாவலக்குப் பக்கத்தில் வர)

வெள்ளைய: பொருந்தார், பொருந்தார், பொருந்தவே
பொருந்தார்
மருந்தினை யனையநம மன்னனு நெருங்கினன்
40. காணமின், முகத்தின் களையினை! நிறைமதி
நாண்மீன் யாவும நலனுறச சேரினும்,
ஒவ்வா இந்த வொளியினைச் சிறிதும

புகழேந்தியும், மாணவர்களும்:
(குலோத்துங்கனை நோக்கி)
வாழி! குலோத்துங்க வள்ளால! வாழி!
ஊழிக காலமிவ வொண்மகிழ் சிறந்தே.

குலோத்துங்கன்: (ஒட்டக்கூத்தரை நோக்கி)
45. முத்தமிழ் மதமபொழி மத்தகக களிறே!
இத்தலத் திருக்குமிவ வருமபெருஞ் சீரியர்
வெண்பா வரிபபுலி வேங்கையா மன்றே?

கூத்தர் : கண்பா னலகள் சூழ் கவின்பா புடையாய் !
வேங்கை வரிப்புலியானே. அவன்தான்
50. பாங்காவாழ் புல்வாய்ப் பானமைய னுவன்

(கலித்துறை)

மானிற்கு மோவிந்த வாளரி வேங்கைமுன் ? வற்றிச்செத்த
கானிற்கு மோவிவ் வெரியுந் தணன்முன் ? கனைகடலின்
மீனிற்கு மோவிந்த வெங்கட் சுறாமுனம் ? வீசுபனி
தானிற்கு மோவிக் கதிரவன் றேற்றத்திற் றாமன்னனே ?

புகழேந்தி : புகழா மலையிற பொருந்திய துங்க !
இகழ்வா யிசைத்தவிக் கவிக்குத் தரமாய்ப்
பாடுதல் வேண்டினன. பாடிய பஞ்சைப்
பாட்டினை யொட்டிப் பாடவோ ? வெட்டிப்
55 பாடவோ ? செப்பாய் !

குலோத் : பல்விதப் புலமைசால்
திருவினை நிகர்ப்போய் ! திகழுந் தநங் குருவும்
கருவினின் றெடுத்துக் கவினுற வளர்த்த
தந்தையு மாய மைந்தமை புலவா
தந்தவாய் மொழியினை வெட்டிடத் தரியேன்.
60 ஒட்டிட வேண்டினன, உயர்கவிப் புலவீர் !

புகழேந்தி அட்டியில் லாமலே யங்ஙனம் புரிவல

(கலித்துறை)

மானவ னுனந்த வாளரி வேங்கையும் , வற்றிச்செத்த
கானவ னுனவ வெரியுந் தணலாம், கனைகடலின்
மீனவ னுனந்த வெங்கட் சுறவினம் , வீசுபனி
தானவ னுனக் கதிரவன் றேற்றந் றாமன்னனே ]

நகைமோ : ஓ ! கோ ! இஃதோ வொட்டிடல் ! அடம்பையின்
ஒட்டு மிதனை யொவ்வா தாயினும்,
செருமுகத் தெவரே கிளையினைத் தெரிவார் ?

குலோத் 65. திருமகட் கிளைய மருமக ளாகிய
செந்தமிழ்ச் செல்வியின் றிருநோக் குடைய

மைந்தர் இருவிரு மிங்ஙன மாறிடல்
இழுக்கே யாகும்;

கம்பர் : இணையறு தமிழ்க்கே.

(பவனி யப்பால் செல்ல)

கண்ணன் : (புகழேந்தியை நோக்கி)

அழுக்கினை யகற்றி யைந்தோ டைந்தரை
70. மாற்றுப் பொன்னென வெங்களை மாற்றிய
ஆற்றலிற் பெரியீர்! அறிவிலாக் கூத்தனே
டின்றே நாட்போ ரியக்கந் தொடங்கி
நன்றே வெற்றியு நமதாயப் பெறற்ரும்.

புகழேந்தி ஆயினும், இதுநா மடைவதி லொருதுளி
75. தாயினும், பெரியதாயக் கூத்தனைத் தழுவும்
அரசன் தனபினை யுணாமினே! ஆகலின்,
அரசன் முனபி லணைந்திடு காலம்
நேரிடின், யாவரும் நிமிர்ந்துநம் மொழியால்
வீழிடின், மீள்வம்

கருப்பண் மெய்யே, யெமதுயிர்
80. போயினும் பின்னிடோம், புலனர் மணியே!

(புகழேந்தி முதலோர் மேற்றளத்தைவிட் டிறங்க)

(காட்சி முடிகிறது.)

# மூன்றாவது அங்கம்

## இரண்டாங் காட்சி

இடம் : சோழன நவராததிரிக கொலுக கூடம

நடர் : குலோத்துஙகன், ஒட்டக்கூத்தா, கம்பா, வேலை யா, மணிவண்ணன, வீரத்தேவன், நகைமொழி நாவலன, ஆறுமுகவேளான, கருப்பஞசாரி, வெள்ளையஞசாரி, கணணன், நல்லான், பெரு மாளபிள்ளை, அஙகணஞசாரி, படைத்தலைவா முதலியோா.

காலம் முறபகல

(குலோததுஙகன முதலியோர் கொலுவிருகக)

(நேரிசை யாசிரியபபா)

குலோத் : அறனறிந் தானறமைநத சொல்லுடை யமைசசே!
திறனறிந தரசிய லீரிரு திஙகள
நலலா றுக நடநததோ? மாமியும்
சொலலின கிழததி மருகியுந துகளற
5 ஒன்றாய் வாழ்நத வொருபெரும புதுமை
நனறாய நிகழநததோ, நமமுடை நாட்டிடை?

வேலையர் ஆமாம, கல்வியு மாசுற கூடிடின,
ஏம முற்றன வெவவையே? நாம
வைவே லரசே!

நகைமொ வையக மதனில
10 ஓட்டிய பாட லிதுவே. உயர்வாம
திட்டினைப் பெய்தே யொட்டினே னென்ற
வெணபாய புலியின் வெள்ளறி வுதவா.

(மணிவணணனை நோககி)

கணபோற பெரியிர! கண்டதைக கூறனும
தீஙகாம. சிரிபபினும, செயபுவா பழியே.

மணிவ: 15 ஆயின், இனிநீர், அழுமொழி நாவலர்
ஆவீர போலும்.

கம்பர்: (சிரிப்புடன்)
ஆயின், இவர்பணி
மாற்றற் கெவரே வருகுவர்? அழுகை
சாற்றற் கியலாச் சகைட் மன்றே?

குலோத். (புன்னகையுடன்)
வருகுவர், பாண்டிய மன்ன னவையிற்
20. பெருகுவெல வாயரோன ரொருநற பெரியார
உள்ளார அவர்தம மொளிவெல வாயாற
கள்ளார செந்தா மரையாள கலக்கப
பெற்றவர், பேசத தொடங்கினு லெவ்ருங
குற்றங் கீறு மொழிகளாற் குட்டுவர

நகைமோ 25 ஆ! கா! அதீசரி, எனையழு மொழியின்
நாவல ளுக்கிய நண்பாகள பலரும
மொழிகளாற குட்டுண முரணிலா வழுகைக
கழிகளின் மூழ்கக காணுவ னன்றே?
"மறந்தும பிறன்கேடு சூழற்க சூழின்,
30 அறஞ்சூழுஞ் சூழந்தவன் கேடு," என அறைந்த
பெரியார மதியிற பெரியா ரன்றே?

குலோத் போதும், நாவல! புகழுமிகு நம்மவை
தொடங்கிய நாளினை மட்மபெறு மொழிகள
இடமபெற விட்டிடா தெழிலாய் நடத்துதும.

(கூத்தரை நோக்கி)

35 நல்லா சிரியரே! நான்குநன மதிகளாய்ப
பொலலா அரசப பொறுப்பினை விடுத்து,
பாண்டிமா நாட்டிற பலவிதச செழிப்பில்
ஈண்டிநம் பதியும, இருங்குடி மக்களும,
மக்களின் கண்ணென வளருநம மரசும,
40. தொக்கநங் கொலுவும, தொல்கவிப் புலவரின்
வாயுறை வாழ்த்து வளர்செவி யறிவுறாஉ

ஆயபன மொழிகளும், அரியநூல காட்சியும
வறிதே விடுத்து மயஙகிய பிழையைச
சிறிதே யாகத தெளிநதிட வேண்டினன்

கூத்தா 45 அன்பினின விநோதத இன்புடை யரசே!
பொல்லா வரசப பொறுபப தெனக்கு
நல்லா ரூக நடநதுமே நாவலா
எவர்ககுங கிடைடொணுப பெருமையை யீந்தது.
எவரே புவிககுங கவிக்கு மரசாய
50 வாயததது? செபபீர்! வருங்கா லததிலும
வாயக்குமோ விபபுகழ் மாந்தாக டமககே?

குலோத்: "மனனனிற கறறோன் மாபெருஞ் சிறப்பினன்,"
என்னலை மறநது பேசுவ தேதிது!
அரச விருபப மகததிடைப புகுநதே
55 உறைநதது போலும்! ஓ! கோ! இன்று
நவராத திரிவிழா நாணமுத லனறே?
நவமாம புலவாக ணறபலாக் கூனியில
ஈயென மொயககுங் மிருஙகொலு
நோயென நுடஙகு நுட்பமி யாதோ? (க)

(நிலைமண்டில வாசிரியப்பா)

மணிவ: 60 மருதப பணைசூழ் மண்டல மாளும
பருதியே! கவிககும புவிககும பாலனும்
ஒட்டக கூததாத மொருபெரு மாட்சியில்
மட்டப புலவரின வமபினை மாற்ற
வேண்டிச சிலரை வெறுஞ்சிறை யிட்டார்.
65 அதனால, உணமை யருமபெரும் புலவர்கள்
விதன மிகுநதே வியர்ததனா போலும்.

குலோத்: இதனால, விதனமேன்? இருமபெரும புலவரிற்
போலியைப போககினு லன்றோ வாலியா
சிததிரைத திஙகளைப போனறே திகழ்வார்?

கூத்தர் 70 அறிவிற பெரியோய்! அதனோ டின்னும
ஒருவினை ணபபம. ஒன்று மறியாப

போலிய புலவரைச் சிறையகம் புகுத்தலை
பட்டிய போதா பகர்ந்தவ ராத்திரி
கிட்டிக் கவிக்கரும விழவினி னாநகசா
75 ராஜரா ஜேசவர் நறுந்ற முனனாக
கொடுபோய வாளாற் கொலைபுரி விக்க
வேண்டுவன் அங்ஙனம் விதிப்பின, எவரும
பூண்டிடார், புலவரின் புகழுடை யதனை
இதனைக் கருதி யன்றோ தமிழ்மறை
80 கொலையிற் கொடியரை வேந்த னொறுத்தல்
களையினைப் பைங்கூழ் கண்டுவிட் டகற்றல்
என்றே பகர்ந்தது; நன்றே யறிவாய்!

குலோத் ஆமாம், அதனை ஆய்வது நேரிதே
சேமம பகுந்தா ரெதனை பேரவா?
85 நாமம பூந்திய பா! அவை நவிலவீர்!

வேலையர் எழுவா அவிர்களி னிசைசினை யமைந்த
முழுமுடங் கலிதோ! காணக! எம முன்னவா!
(ஓர் ஓலை நறுக்கினைக் கொடுக்க)

குலோத் (வாங்கிப் பார்த்துக் கொண்டே)
என்னே! என்னே! இக்கொடுங் காலம்!
வண்ணான்! தச்சன! மயிர்வினை ஞனமுதற்
90 சருமான! குசவனுங் கடையரு மிங்ஙனம்
கருதினா கொல்லோ!

நகைமோ கருதின தொன்றோ?
கச்சையும வரிந்து, கட்டினா போர்க்கு

கூத்தர் ஆமாம, அரசே! அருமபுகழப புலவா
'நாமாம,' என்று நவின்றமுன் வரவும
95. வெட்கினா மிகநனி விளங்குமுன் னாழித
தமிழ்ச்சங் கம்போற் றழைத்ததின் வேத்தவை
அமிழ்துறழ் மதிபோ யகன்றநல விரவெனக்
காணுதற கிதுவே காரணம,

குலோத் ஓ! சேர!

அப்படி யாயின், அதனைப் பொழுதே
100 செப்பஞ் செய்குவம் சேவகா! சிறையினில்
வதியும் போலிப் புலவர் தம் வகையினை
விதியே முறையாய், விளங்கி யொருவரினை
ஒருவராய் நமதவை யுற்றிடச் செய்வாய்!

வீரத்: கட்டளைப் படியே.

(செல்ல)

சம்பா: (அரசனை நோக்கி)

கார்போ லுதவும்
105. திட்டமாய்ப் பொருண்மழை தெளித்திடு வள்ளால்
இம்மைச் செல்வ மிருவகைப் படுமவை
செம்மை யுறவே சேர்ந்திடப் படுவோர்
மேற்பால் கீழ்ப்பா லாயினும், வேற்றுமை
ஏற்கா புலியோர் ஆகலின், இன்றீங்
110 வருவோர் பாலினை மறந்துமற் றவரின
அருமையை யுணர்தலும், ஆன்றவ ரென்று
நடுநிலை கோடா நன்மையி னின்றே
உயர்நிலை காணப்பாப் பரிசுபெற் றுய்தலும்
புரிதர வேண்டினன், புகழ்சா லரசே!

(ஆறுமுகவேளான தோன்றி அரசனை வணங்கி, கூத்தரை மிடுக்குடன் பார்த்து நிற்க)

கூத்தர் (இறுமாப்புடன்)

(கலிவிருத்தம்)

மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
யானை முனவந் தெதிர்த்தவ னாடா?

ஆறுமுக்: (பெருமிதத்துடன்)

கூனை யுங்குடமுங் குண்டு சட்டியும்
பானை யுஞ்செயு மங்குசப் பையல்யான்,

நகைமோ: 115 ஆ ! கா ! நேர்த்தி ! நேர்த்தி ! ஆ ! கா !
பாகினை யடர்த்துப பன்மதம் பொழியும
கரியினை யடர்பபது கருதுமங் குசமோ ?
வரியிரண டாலே மாட்டின னன்றாய் ,
விரிசெவி யிரண்டும வெடிககவங குசபபயல்

குலோத்: 120. ஓ ! கோ ! மும்மத மொழுகுங் கரிக்குப
பாகின் கைவாழ் பாரவங குசமோ ?

(சேவகனை நோக்கி)

சரி தான் ! சேவக ! சடுதியி லிவரைப்
பரிவுடன் கொடுபோய்ப பகர்கரு வூலத
தலைவபாற சேர்த்து, தககற பரிசுகள
125 பலவுங கொடுக்கப் பகர்ந்துமற றொருவரை
அழைதது வா !

வீரத் : ஆணை

(குயவனோடு போக)

நகைமோ ஆ ! கா ! இவர்முனம
அடிமுடி தேடிய தடியடி விடுதது,
வடிமிகு மஙகுச மாறறமுற றனரோ !

(கண்ணன் தோன்றி வணங்கி நிறக)

கூத்தர் (கடுமையோடு)

(கலித்துறை)

விண்பட்ட கொககுவல் ஆறுகண் டன்ன விலவிலக்கப
புணபட்ட நெஞ்சொடு மிங்குநின் றாய்பொட்டையாயபுகலாய்.

கண்ணன் (மிடுக்குடன்)

கண்பொட்டை யாயினு மமபட்ட ஞன்கவிவாணர் முன்னே
பண்பட்ட செநதமிழ நீயுந திடுக்கிடப் பாடுவனே.

(கூத்தர் திடுக்கிடல்)

நகைமோ : அந்தோ ! அந்தோ ! அடியிவை யிரண்டும
130. நொந்திடச செய்யு நுட்பமா மடியே,

குலோத் : (வியப்புடன்)
திடுக்கிடப் பாடுந் திறலுடை யீரோ ?

(சேவகனை நோக்கி)

அடுத்திடு வீர ! இவரையு மழைத்துக்
கருவூ லத்தையே காட்டிடு ! மற்றவர்
'வருக !' எனவே வழங்கிடு மாற்றம்

(கண்ணன் போக, கருப்பணுசாரி தோன்றி அரசனை வணங்க)

கூத்தர் (அமைதியாக)

135 ஐய ! எம மனையி லிணைந்தநீ விர்யார் ?

கருப்பணு : (கிளர்ச்சியுடன்)

(கலித்துறை)

செலவன் புதல்வன் றிருமேவங் கடவனைச் செகத்குருவாங்
கொலலனை கவியைக குறைசொல்லு வோரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர் முன்னே
அலலும் பகலு மடிப்பேன் கவியிருப் பாணிகொண்டே

(கூத்தர் மனங்குழம்ப)

நகைமோ : என்னை ! என்னை ! இருங்குற டதனுற
பல்லைப் பிடுங்கலா ? பகர்கொல்ல னன்றோ !
அதனுல், கவியிருப் பாணியா யிறறோ !

குலோத் கவியிருப் பாணியோ ! கண்டோ நுந்திறம்.

(சேவகனை நோக்கி)

140 புவிபுகழ் வீர ! பொருக்கென விவரை
வேண்டும பரிசுடன் விரைவா யனுப்பு !
மீண்டுமற் றொருவரை விளித்திடு வாயே

(கருப்பணுசாரிபோக, வெள்ளையணுசாரி தோன்றி அரசனை வணங்க)

கூத்தர் : பெரியோய ! யாரெனப் பேசுவாய் சிறிதே.

வெள்ளை : (சினத்துடன்)

(கலித்துறை)

சொன்னசங் தக்கவி யாவரு கேட்கச சொல்லுவனியான் ;
இன்னசக் தக்கவி யேதென்ற போதி லெதிர்த்தவரை
வன்னசந் தங்கெட வாயைக் கிழித்திட்டு வாய்ச்சியினுற
கன்னசந் தங்களி லிக்கவி யாப்பைக் கடாவுவனே.

(கூத்தர் தலை குனிய)

நகைமோ : வாய்ச்சியி னாலே வாயைக் கிழித்துக்
145 காய்ச்சிட்ட கவியாப் பைக்கைக் கொண்டு
கடாவுவ ராமே ! கவின்தச்சுப் பணியின
திறமினை யாரு செயவுள்ளிற றெருணடிட்டச் செய்த
திறமையே திறமை !

குரோத் : (வியப்புடன்)

திகழ்ந்திடு பெரியீர் !
என்னே ! என்னே ! என்னே நும மிருபொருள் !
150. நன்னயக் கவிப்பா ! - நற்கவி யாப்பு !
முன்னயச் கவியிருப் பாணியி னிதுவே
சொன்னய முடைய துகளறு மொழியே !

(சேவகனை நோக்கி)

விருப்புடை வீர ! விளங்கிய இவரும .
கருவூ லத்தைக் கண்டிட்டச் செய்து
155. வருவாய், மற்றொரு மாணவர் தம்மொடு

(தச்சன் போக, நல்லான் தோன்றி வணங்க)

கூத்தர் : தம்பிநீ யாவன ? சாற்றுவாய், சற்றே.

நல்லான் : (கலித்துறை)

சேலேய் விழிமட வாரிறசெங் காலன்னஞ் சோப்பழனப்
பாலேய் மணவையிற் கூத்தரின் போலியர் பாப்புனைந்து
நூலேய் துகளறத் தாய்தாகக் கோனமை நுவல்வதலலான்
மேலேய் தமிழ்ப்புல வோரென்னே யென்னே விளம்புவதே ?

(கூத்தர்முகஞ் சுளிக்க)

நகைமோ கதையடி ! இந்நல கதையடியாமே.
பகைமிக வளதிவா பாடிய பாவில
துவைத்த லாகிய தொழிலினைக கூததரின
160 கவைததிடநநிவிறு கணடோட்டு தொழில்வரும்
ஆடையைத தூயதா யாசகுநற றெழிலாய்க
கூறிய மதித்திறந கொண்டாடற பாறநே.

குலோத் : நூலேய் துகளற நொறுக்கும புலவிர !
பாலைய நுநதொழிற் பார்தது மகிழ்நதனம்.
165. வைபபக நோககிச் செலலுதிர் ! மற்றவர்
கைபபக நீககிக காணக நம மவையே.

(நலலான போச, அஙகணனுசாரி தோன்றி அரசனை வணங்கி நிறக,)

கூததா ஈததுறை வலலாய் ! இயமபுக ! நெளிவாய்

அங்கணன் : (கலித்துறை)

திகிரிவட டககுடைச் செஙகோ லபயன செழுஞசிலம்பிற்
பகுதியொட் டககூததப பட்டனை நானப பணைககவியில்
மிகுதியொட டததட்டி விட்டகை யோட்டி ஓருககிககுததிப
புகுதவொட் டததடடி மேலணு காவணம் போசெய்வனே.

(கூததாமுகம வெளுகக)

நகைமோ தட்டித தட்டித தட்டா னென்னப
படடார் தாமெனப பாட்டினிற் கூறி
170 ஓடடி ஓருககிக குததது செயலும
காட்டிய விவாதிறம காணுணு வியபபே.
மறுதொழிற செய்து மறுவறு கல்வியைப
பெறுமவா பெருமையே பிறங்கல் விளககாம்.
வநதுசெல லறுவா நந்திடல காண்மின் !
175. மேலுமுன சங்கம விளஙகிய புலவாதம •
வாலுடைப பெயர்களும வலியுறச செயுமே.

குலோத் : பசுத்தோல போாதத புலியெனப பாயும்
விசிததிரப போலிப புலவர்தஞ செயலெலாம
கணடுநாம் வியபபே கொண்டனம

(சேவகனை நோக்கி)

காவல!

180. கொண்டுசெல்! இவரையும் கொடுத்திடப் பரிசிலே.

(சட்டான் போக, பெருமாள் பிள்ளை தோன்றி அரசனை வணங்கி, கூத்தரை முறைத்து நோக்கி நிற்க)

கூத்தர்: காப்பியக் கவிஞர்முன் கவல்சிறி தின்றிப்
பாப்பனப் புலவன் பார்த்திடன் முறையோ?

பெருமா. (அரசனை நோக்கி)

(கலித்துறை)

கோக்கனாடு மன்னர் குரைகடல் புக்கிட, சோக்கனப்
பூக்கண்டு கொடியும் பூவா தொழிந்தில; பூதலமேழ்
காக்கின்ற மன்ன! கவியொட்டக் கூத்தனின் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்க ளோதமிழ் பாடிடு பாவலரே.

(கூத்தனை நோக்கி)

புவிக்குங் கவிக்கும் பொருந்திய வரசெனக்
கவிக்கும் பெருமையாங் கவின்மலை வாழ்வீர்!
185. புவிக்கும் திலகமாம் புகழ்குலோத் துங்கன்
செவிக்கினி மையொடு செப்பிய வண்டப்
பரணியிற் பூவினைப் புகாங்க ராயும்
தரணிசூழ் சக்கிர வாளநற் கிரியைக்
கோட்டையா வதற்குட் கொண்டிடு கடலை
190. மோட்டிடங் காவாழ் மொழிபெருங் கிடங்கா
மேருநன் மலையே விளங்குநற் கொடியாக்
கூறிய நீவிர் கோட்டைக்கு வெளியே
அகழினை யமைக்கு மருமையை யயர்த்தே
இகழினைக் கொண்டதேன்? நேமிக் கப்பாற்
195 பொருந்திய பெரும்புறப் புனலையறி யீரோ?
அருந்திறற் கம்பர் அயோத்தியைச் சிறப்பில்,

(கலிவிருத்தம்)

"நேமி மால்வரை மதிலாக நின்றப்
பாம மாகடற் கிடங்காகப பன்மணி
வாம மாளிகை மலையாக மன்னற்குப
பூமியு மயோத்திமா நகரம போலுமே,"

என்பது நுமமுடை யிரமி னெஞ்சிற்
புகுந்திலை போலும்!

(கூத்தர் வெட்கித் தலை குனிய)

நகைமோ : புகுந்தது. ஆனாற்
பொருந்திய திலையே போலிப் புலவர்ச்சிச்
200 கேலிக் கிடமாயக் கிடைத்தநங் கூத்தர்
நிலையினைக் காண்மின்! விலையிலாச சுருதிற்
பன்முறை தோற்ற பாவியிற் கொடியராய்
வின்முறை வணககம் மெததவுங் கொண்டார்.

குலோத் : (வெறுபபுடன்)
என்னே, நாவல! யாது கூறினை?
205. இவாகளோ போலியர்? இவாகளை யடைதத
செயலே போலியாம சீ! சீ! இமமுறை
விழலே!

(வேலையரை நோக்கி)

அமைசசரின மிக்கோய்; இவர்க்கும்
பரிசில கொடுத்து, பன்னாள் வறிதே
சிறையகப பட்ட சிறுமையைத் தீரத்துச்
210. செலுததுவாய்! இத்துடன் கொலுவினை த
தீர்ததேன்;
செலலுவன், அரண்மனை வல்லையின யானே.

(அரசன செல்ல, கொலுக் கலைகிறது)

(காட்சி முடிகிறது)

# மூன்றாவது அங்கம்

## மூன்றாங் காட்சி

**இடம் :** சோழன் அரண்மனையில் அந்தப்புரம்.

**காலம்.** பிற்பகல்.

**நடர் :** கற்பகவல்லி, வெண்டாமரை, செங்கமலம், மணிவண்ணன்.

(கற்பகவல்லி கூடமொன்றின் நடுவண் சாய்மணையிற் சார்ந்திருக்க, வெண்டாமரை வெண்கவரிவீச, செங்கமலம் வாயிலிற் கைகட்டி நிற்க).

(நிலைமண்டில வாசிரியப்பா)

கற்பக: (மகிழ்வுடன் வெண்டாமரையினை நோக்கி)

கலைமக ளலைமகட் கவினுடை நங்காய்!
மலைமக ளனையநின் மாற்றப் படியே
இருபுறக் காத லிணைந்தத் தலைவரின்
பெருநலச் சிறப்பினைப் பேசிட நாணம்
5 குறுக்கிடு கின்றது

வெண்டா: அன்றியும், கொற்றவன்
குறுநகைச் சிறப்பினைக் கூறிட நமது
வெண்பாப் புலியும் மிகநலிந் திடுவர்,
என்றால்,—

கற்பக: அந்தோ! அயர்த்தேன்! இணையறு
குன்றும் கவிக்கு, குவலய மனைத்தும்
10 ஒன்றாய்த் திரளினு மொவ்வாப் புலமை
வல்லோ ரீண்டுமுன் வந்துள் ளனரே!
என்னே! அவர்தா மென்னவந் தீண்டு?
கண்டன ரிலலை! கண்டனை கொல்லோ?

வெண்டா. யாரோ அறியேன், நேற்றிரா மன்றே
15 தண்டமிழ்ப் புலவனைக் கண்டே னில்லையே.

கற்பக. ஆயின், அவரைநாம் அகத்திய மின்று
காணுதல் வேண்டும்

(செங்கமலத்தை நோக்கி)

கமலமாங் காரிகாய்!
மாணுறு மணிவண அமைச்சரை மற்றியான்
காணுற விரும்பிய வேணவாக கழறிக்
20. கொண்டுநீ வருவாய்!

செங்கமலம் : கூறிய படியே!

(செல்ல)

கற்பக. (வெண்டாமரையை நோக்கி)
கண்டனை நங்காய்! கவியவர் ஒழுக்கம?
பெண்டுக ளென்றாற் பெரிதும்பின் னிடுவர்,
அதனு லன்றே அவர்நமைக் காண
வந்தன ரில்லையே?

வெண்டா. வாய்மை முன்னாச்
25 செந்தமிழ் நமக்குச் செப்பிய காலையும்
நம்முக நோக்கு நயப்பினை விடுத்து
மைம்முகங் காட்டும பளிங்கினை நோக்கிப்
பாடஞ் சொல்லிய பண்பென் னெஞ்சகம்
ஓடம் போன்றே புலவிய தொண்டொடீ!

கற்பக: 30. பிறன்மனை நோக்காப் பெரியா ரிவர்போல்
அறன்கடைப் பிடித்தா ரியாரே? அறைகுவாய்!

வெண்டா பிறன்மனை யென்னலிற் பெண்டி ரெவரையும்
அறனிற நோக்கா வண்ணமே யாமெனல்
மணமது கொள்ளாக் குணத்தையும விளக்கும.

மணிவ: (தோன்றிக் கைகுவித்து)
35 குலோத்துங்கக் குரிசிலாங் கொற்றவர்க் குற்ற

வலோத்துங்கப் பாண்டி மன்னவன் செல்வீ!
வணக்கந் தந்தேன். மங்கையாள் கமலம்
அழைத்தனள் திருவடி யாணையைக் கூறி
பிழைத்திலேன் யாதும்; பேணிய வெல்லாம்
40. அமைத்தனன் முன்னரே ஆயினும், அயாப்பால்,
இமைத்துயான் விட்டன எவையு முளவேல,
மனித்தெனைத் தெருட்ட வணங்கினன்
பன்முறை.

கற்பக:
நனித்திடு மமைச்சே! நுமமுடன் முனபு
எந்தையா ரனுப்பிய வெழிற்புக ழேநதியாம
45. நந்திய நற்றமிழ் நாவலா யாணடுளா?
எமமவை காணு திருபபதேன்?

மணிவ
எம்முடைச
செம்மலின் றேவீ! தீங்குக ணிகழ்ந்தன
அறியாய் போலும!

கற்பக:
(வியப்புடன)
ஆ! கா என்னே!!
மாண்டன ரேயோ?—!

மணிவ:
மாண்டன ரலலா
50 கூத்தப புலவா கொண்டிடு விதவக்
காய்ச்சலாற் புலவரைக கடிமனைப் படுத்து
வைத்தனா அவரும் மனையகந தன்னில
புத்தமு துண்டு, போஷப புலவரை
விதநதக ராககி வீறுகொள துங்கன்
55. நவராத் திரிகசொலு நண்ணிய வின்று
அவைககே யனுபபி யாடுங கூததனை
ஓடுங கூததனு வோட்டி யடிததார்
ஆயினும, அவர்சிறை யாசற் கின்னும.
மேயின தில்லை. அரசனோ மெதததவுங்
60 காய்சின முறறுளன்; காலையி லவைககண்
நிகழ்நதன நெஞ்சக நிறைநதன போலும.

கற்பக : ஓ! கோ! கூத்தன் ஒப்பிலா வரச
ஒகையில்வெறிகொண் டுணாவிழந தனனகொல்!
வாகே யவனறிறம! மணிவனு! இனறிரா,
65 சூழசசிகள சிலவாற கூததனைத தொலிதது
மாட்சிப் புகழுடை யாபெரும் புலவரைச்
சிறையக நீக்கிச சிறபபுறச் செய்வான்
இறைவனை யழைத்திங் கேற்பன செய்வாய்.
இரவி படுமுனம் எமமுடைய பளளி
70. அறையினை யடைப்பேம. அரசன் கவலுறின்,
கூததனை யழைக்கக் கூறு, முதற்கண்.
காத்தனன் மீணடுங கலங்குறு மரசன்.
அபபொழு தரசன செவியகம் கூததனின
ஆட்சியை விளக்கி, சூழ்ச்சிசால் புலவரை
75. வரவழைப பதற்கு வழியினை நாடு.
கரவுடைககூததனின் தலையினைக் கவிழ்த குகம்

மணிவ அமமணீ! குறித்த வாணைப் படியே
இமமியுந தவறு தியற்றுவல் கூத்தன்
செருக்கினை யளக்குந திறனிலை அதனை
80. உருக்குலைத தருளவ துன்னுடைய பணியே.
இன்றுமுன் னிரவி லிணையிலா வரசுடன்
நனறியோ டணடு நணுகுவல் அரசன்
நாடினும் நாடுவன் நானினிச சென்று
வருகுவல் பாறகடல வநதிடு கற்பகத்
85. திருவே யனையாய்!

(செலல)

வேண்டா. (கறபகத்தை நோககி)

தேவாகட் கரிய
அமிழ்தே யனையாய! கண்டனை அழிம்பை?
இமிழ்திரைக் கடல்சூழ் இவ்வுல கதனிற்
கூத்தனைப போன்ற கொடுமபதா காணுதற
கருமையாம. அனறே அவையினம புலவரோ
90 டுழறிய பேசசி லுணாநதனன, முற்றும.

கற்பக ஆமாம், துறைதொறும் ! அறிவிலாப் பெரும்பதர் !
எம்மத் திலை விருங்கள் ஆடன !

செங்க. (கற்பகவல்லியினை நோக்க)

அன்னாய் ! இன்றவ ரவையினிற் பட்டன
என்றொரு நாவா வியப்புறு காகா.
95. போலிப் புலவர்கள் போட்டுறப் போட்டால்
தாலி யறுந்தது

கற்ப ஓ ! கோ ! நாவியை
அறுத்து மூலையி லெழுதிய போலிப்
புலவர்க ளாரவர் ? புகுந்தன யாவை ?

செங் வலம்புரி யன்ன மணிமிடற் றம்மணீ !
100 நிகழ்ந்தன நெடுங்கதை யாமே. அவற்றை
விகழ்ந்துவன் கேட்டருள் !

வெண் (கற்பகத்தை நோக்கி)

நேரிழாய் ! இங்குப்
புழுக்கமே மிகுந்தது. பூங்காப் புகுந்தால்
இழுக்கமே யின்றி, இருங்கதை யதனைக்
கேட்கலா மன்றோ ?

கற்ப ஆமாம், கிளிமொழீ !
105 நாட்களாங் கோடை நடப்பன போன்று
வியாத்தது மிகவும் அயர்த்தனன், புலவர்பால்
கொண்டிடு மனப்பகை கொண்டிட லாலே.

(யாவரும் போக)

(காட்சி முடிகிறது)

# மூன்றாவது அங்கம்

## நான்காங் காட்சி

இடம் : அரதப்புரப் ப‹

காலம் : முன்னிரவு.

நடர் குலோததுங்கன், கற்பகவல்லி, வெண்டாமரை, செஙகமலம், மணிவண்ணன், ஒட்டககூத்தா, புக ழேந்தி, மூக்கன்.

(பள்ளியறை மூடப்பட்டு, செஙகமலம் வெளியே காவலாக நிற்க.)

குலோத் : (மணிவண்ணனேடு தோன்றி)

(நிலைமண்டில வாசிரியபபா)

மணிவண்ண ! இன்றியான் மறநதது போன்றே
அணிநகை மடநதையை அயர்த்திலே னென்றும்.
பகற்பொழு தனைததும மறந்ததாற் பாவை
இகறபொழு தாக்குவ ளிரவைத் திண்ணம
5. அதோபார் ! பளளி யறைக்கத வநதோ !
மதோஒன் மததனின் வளர்கண் போன்றே
மூடிக கிடத்தலே மூவா தாம் வரினும்
ஓடிக கெடுமோ வொள்ளிழை யூடல ?

(செங்கமலத்தை நோககி)

வாராய் கமலா ! வாருகுழல் யாண்டுளாள் ?
10. கூறுய ! கதவங் கொண்டதென் மூடி ?

செங்க வளவர்தம் மணியே ! கிளவிகள யாதும
கேட்டிலேன் ஆயினும, வாடடடங் கண்
மாலையி லிருநது வளாமுகஞ் சிவநது,
மாலையாய்க் கண்ணீா மார்மீ தோட,
15 உலைமூக கெனவே உயிாபபுவிட டதனுல

மலைப்போக் கெனவே மார்புக ளெழுந்திட
இருந்தா ளெழுந்தாள், யாதோ வொன்றை
நினைந்தாள் போல நெடுமூச் செறிந்தாள்,
காவினை மறந்தாள், கடிமயி லிகழ்ந்தாள்,
20. தேவினைத் திட்டினள், சேடியை வெறுத்தனள்,
கந்தினை யுந்திலள், கழங்கினை யாடிலள்,
எம்மனோ ரெவரையும் ஏறிட்டு நோக்காள்,
மமமர்நோ யெனவும் வாய்விட்டுக் கூறாள்,
இருந்தாள், சிலகொடி முன்னரே யெழுந்து,
25. பள்ளியிற் புகுந்து கதவினைப் படுத்துத்
துள்ளியங் கொளித்தாள். தோன்றலீ
கண்டாள்,
எனவரு மோவென வேங்கியே நின்றேன்.

குலோத் : ஓ! கோ! இஃதென்? ஊடலாம். கரும்பின்
பாகே யனையசொற் பைந்தொடீ! என்வர
30. வுணர்த்தியே நங்கையி னூடலை யொழிப்பாய்!

சேடி: துணைததார்த் தோன்றல்! தொடுத்தநுங் கட்டளைப்
படியே செய்வல

(குறள்வெண் செந்துறை)

௧ அபய னண்மினன் அபய னண்மினன்
அழகு கற்பக வல்லியீர்!
அபய மீகுவன் அயாத்தி லானினி
அணங்கு பொற்கத வகற்றுமின்!

௨. பகலி லேனமை மறந்த மன்னனைப்
பார்க்கொ ணாதென வூடுவீர்!
அகலி லேவிடு நெய்ய தென்னவே
அணைந்த னன்கத வகற்றுமின்!

(உள்ளிருந்து கதவைத் தாழிட)

பார்த்தனை? பெரும்!
அடியிடை மிகுகிய கனியற் றாள்வாள்

மாற்றுத லென்னு ளாற்றலு மாகா (து).
35 அரியே றன்ன வரசே! புலவராக்
கரியே றன்ன வருந்தமிழ்க் கூத்தர்
வாய்மொழி கேட்பின் மாறினு மாறுக
ஆய்மொழி நங்கை யகத்துறை யூடலே.

மணிவ: ஆமாம், பெரும! அதுவே யுறுதி.
40. வாமமாம மணத்தினைப் பேசி முடித்தவர்
அவரே யன்றோ? அவர்தம் வாய்மொழி
துவர்வாய்த் தோகையாக் கமிழ்தே துணியின்!

குலோத்: அங்ஙன மாயின், மணிவண்ண! கூத்தன்ற
இங்ஙனம் வருவா னியம்புவல்.

(சேவகனை நோக்கி)

ஏவலா

மூக்கன்: 45. அடியேன்

குலோத்: சென்றுநீ யரண்மனைப் புலவரை
நொடியிற் கொடுவா!

மூக்கன்: அடிமையப் படியே.

(செல்ல)

குலோத். மணிவண்ண! கூத்தர் மதிமிக வுடையர்.

மணிவ: அணியுறப் பாடுவா.

குலோத்: ஆயினும், இன்று
கொலுவினில்—

மணிவ: அவர்செயல் கோணலா யிற்று.

குலோத்: 50. ஆமாம், அஃதெனக் களவின் மானக்
கேடாய்க் கற்பகக் கிளியூடப் பற்றுக்
கோடாய் முடிந்தது இஃதென் கொள்கை?
புலவரைப் போலிப் புலவரென் றடைத்துக்
கலாமிக விளைத்தார்! கருத்தென்?

மணிவ: யார்க்கும

55 நிலையது மிகுந்தாற் கிளையினை மறக்கும்,
கலையது வளரும; கண்களோ காணு;
செவிகள் செவிடாயத திருமபும, நெஞசம
புவியினை நாடா புலோமிசை வேண்டிக
குறுமுனி வாயாற கொடுஞசாப முறறுப
60 பெருமா சுணமாய்ப பிறங்கிய நகுட
அரசன் கதைநீ அறிவா யன்றோ?

குலோத்: ஓ! கோ! நகுடனை யொத்ததோ இவர நடை?
வாகே இவரசெயல! மணிவணு! இவரும
நகுடனைப் போனறு யாரபாற் பிழைத்தார்?
65. தமிழ்முனி போன்ற தகுதியா யாவர்?

மணிவ: அரசே! தமிழமுனி யனைய புகழேநதி.

கூத்தர்: (தோனறி)

மாணவ மணியே! வந்தனம! நள்ளிராக்
காணவே வேண்டிய கடிவினை யாதோ?

குலோத்: புலவீர்! பாணடியன பொற்கொடி யின்று
70 புலவியிற புக்கனள புலவியை நுமது
விலையிலாப பாடலான் விலககவே வேண்டிக
கலைவலோய்! அழைததனன். கண்டீர் கதவம்
மூடியே கிடபபது? மொய்குழற புலவி
ஓடியே யொளிகக வொருகவி யோதுவீர்!

கூத்தர்: 75. ஆ! கா! அரசே! அஙஙன மேயோ?
பாகே யனையநம பைநதமிழ்க் கவியால
இட்ட முறுத வேநதிழை யுண்டோ?

(கதவருகிற சென்று)

(கலித்துறை)

காரத்துள சிரத்தும களிக்குங் களிறறுடைக் கண்டன்வ, தான்
இரததுங் கபாட மினித்திறப் பாய்பண் டிவனணங்கே

உரத்துஞ் சித்தூர் கபாட திறந்திட்ட தண்டிலங்கா
புரத்தூர் கபாட புரத்தூர் கல்பாணா புரத்திலுமே.

கற்பக: (உள்ளிருந்து சொணடே)

ஒட்டக் கூத்தரே! உம்முடைய கவிக்கியான்
இரட்டைத் தாழ்க்கோ லிட்டே னறிவீர்!

(இரட்டைத் தாழிட, கூத்தர்முக மாறுபட)

குலோத்: 80. அந்தோ! இரட்டைத் தாழினை யகமிக
நொந்துமே யிட்டாள், மணிவனே! நுண்ணிடை
புலவியோ பெரிதாய்ப் போராய், இரவிற்
கலவியைக் காணல் கான னீரினை
அவாவிய மானிலை யாகுமே போலும
85. கவான்கவின் மிக்க காரிகைக் கிவ்வணம்
தவாச்சின மூளத் தவறு புரிந்தவர்
யாரோ? கூறுதி!

மணிவ: அண்ணலே! அடியேன்
ஆயினும், பாண்டிய னரணமனைப் புலவர்
தாயினு மிக்கார், தனிப்புகழேந்தி
90. கூத்தப் புலவராற் கொடுஞ்சிறைப் பட்டார்.
எத்தருஞ் செல்வி இதனாற் கவலை
கொண்டனள் போலும். குவலயம் புகழும்
மண்டல வரசே! அவரினைக் கொண்டு
கெண்டையங் கண்ணியி னூடலைக் கெடுக்கச்
95 செய்திட லமமாம். தென்னவன் மருக!

குலோத்: செய்தியென்? அந்தோ! செந்தமிழ்ப் புலவரை
மறந்தேன் மிகுதியும் வாரீர் கூத்தப்
பெரியீர்! அவரைச் சிறையிற பெயர்த்திடச்
செய்ததென்?

மணிவ. சாதிசால வளவ! சேயிழை
100. ஊடலை முதற்கணொழிப்பாய! பின்னர்
நேடலாங் கூத்தர் நிகழ்த்திய மனுமுறை.

குலோத். ஆமாம், மணிவண்ணா! அதுசரி. கூத்தரை
நாளைக் காலை நம்முடைத் தனியறை
அகத்தே வரச்சொல். யாரது? சேவகா!

மூக்கன் 105. அடியேன் வந்தேன்

(சேவகன் வர, கூத்தர் நழுவ)

குலோத்: பிடிநீ அரச
அடையா ளக்கணை யாழி யிது. கடு
நடையாய்ச் சென்று நறசிறைக் கூடத்
தலைவற் கண்டோன் சாற்றிய தாக
விலைமிகு மாழியைக் காட்டி விரைவினில்
110 நற்புக ழேந்தியை நயமுடன் கொடுவா!

மூக்கன்: கற்பனைப் படியே

(கணையாழியைப் பெற்றுச் செல்ல)

குலோத். மணிவண்ணா! கலைவலார்
நின்னுட னன்றோ நெருங்கின ரீண்டு?

மணிவ: மன்னவ! வாய்மை வந்தே யிருவரும்;
தென்னவன் தந்த சிறப்புடன் ஒட்டக்
115. கூத்தப் புலவர் கொண்டநம் புலவரின்
நாத்திகழ் பெயரினைக் கேட்டலும், நயமிலாக்
கொடுஞ்சின முற்றனர், "சிறையாங் கோட்டம்
கொடுபோ!" என்றனர். மறுதியான் கொடுத்த
நன்மொழி பலவும் நறுக்கப் பட்டன
120. கன்மொழி பலவாற் கடியவும் பட்டனன்.

புகழேந்தி. (தோன்றி மகிழ்வுடன்)

வாழ்க! வாழ்க! வளவர்தம் பெரும!
ஊழிக் காலம், ஒள்ளிழை யுடனே

குலோத்: வருக! வருக! மாசிலா மணியே!
வருக! வருக! பெருகுபுக ழேந்தி!
125. வருக! வருக! வருந்தினிர் பெரிதும்.

(புகழேந்தியை உட்கார்ந்து கொள்ள)

புகழேந்தி: வந்திலேன், சிறிதும் மன்னவர் மன்ன!
திருந்தலார்க் கடந்த செருப்படை மறவ!

குலோத்: நாவலர்க் கரசே! நலத்துறு நுண்சிறை
ஏவலர் இயம்பிய வினையினை யறிந்தேம்
130 கற்பக விளங்கொடி நும்மைக் காணு(து)
அற்பகஞ் செறிந்த வெம்மையுங் காண
மறுத்தனள், பள்ளியில் மயக்கமுற் றனள்போல்
இருந்தனள். அவட்கே இயம்புவீர் சின்மொழி.

புகழேந்தி. மன்னவ ரேறே! வழுத்திய படியே,
135 கன்னல் மொழிக்கு நன்னயம் பகர்வல்

(கதவருகிற் சென்று)

(கலித்துறை)

தூபங் கமழுபைங் கோதையன் விக்ரம சோழமன்னர்
தீபன் புறங்கடை வந்துநின் றானின் றிருப்புருவச்
சாபங் குனிய விழிசிவப் பத்தலை சாயத்துநின்ற
கோபந் தணியன்ன மேயெளி தோநங் குடிப்பிறப்பே.

கற்பக: (தாழ்க்கோல் விலக்கிக் கதவினைத் திறந்து கொண்டே)
புகழினை யேந்திய புலவீர்! நுமது
புகழ்மிகு பாட்டினைக் கேட்டுமுன் போட்ட
இரட்டைத் தாழு மெடுக்கப் பட்டது

(வெண்டாமரையுடன் வெளியில் வந்து)

அரட்டைய ராகிய கூத்தரின் செயற்கு
140 மாணவி யாங்கள் வருந்தினேம் மிகவும்.
ஆணவச் செயலா மதனை மறந்து,
களித்திட வேண்டினேம், கழகமெய்ப்
பொருளே!

(குலோத்துங்கனை நோக்கி)

அன்பினில் விளைந்த அமிழ்தே! இன்றியான்
துன்பினில் நடமைத் தொடக்குற் விட்ட
145. பெரும்பிழை பொறுப்பீர்! பேதையே னன்றோ?
அரும்பிறந் கடையேன் றொழுதன னும்மடி

(வணங்கி)

குலோத்: (கற்பகத்தைச் சுட்டிடலைத்து)

அரும்பெறற் பாவாய்! அவ்வணங் கூறேல்!
பெரும்பிழை செய்தே பெரிதும் புலவர்
சிறையினிற் புகுந்து சிறுமையை யுற்றூர்.
150. அறியேன் முன்னர் அறிவனேல், நீயும்
இவ்வண மூட்டாய். எல்லாங் கூத்தரின்
கைவண மாகும் கற்றறி வுடையயாம்
கழிந்ததற் கிரங்கற் காவொன்று தாகலின்.

கற்பக: கழிபே ரின்பக் கடலினைக் காணுதும்
155. அன்பே! அதோ! காண்! அப்பெரு வூசலில்
இன்பே யுற்றாம் இருப்பம் மணிவண்ணன்
வெண்டா மரையுடன் மேவிநம் மூசலைத்
தண்டா ரலையத் தணகான் மோத
ஆட்டுவன. நமது அரண்மனைப் புலவராம்
160 பாட்டுடைப் புகழார் பாடுவ ரூசல்
கேட்டே மகிழ்வம். கிட்டுதற் கரிய
மதவே ளனைய மாற! நீ வருகவே!

குலோத்: இதமிகு மெனனுடை யின்பே! உன்மொழி
வியாழன மொழியினும் மிகுமே புலவீர்!
165 வயாவுறை மங்கை மனப்புண் மாற,
வள்ளியு முருகனு மானவே யாங்கள்
ஊசலி லமர்வே முள்ளமு மூசல்
நிலையினை யுறவே கலைவலீர்! பாடுமின்!

(கற்பகத்துடன் ஊசலில் அமர)

# மூன்றாவது அங்கம்

## ஐந்தாங் காட்சி

இடம் : சோழனரண்மனை யந்தப்புரப் பூஞ்சோலை

நடர் : வெண்டாமரையாள், செங்கமலம், மணிவண்ணன்.

காலம் : அதிகாலை.

(பூஞ்சோலையினூடே வெண்டாமரையும், செங்கமலமும் புகுந்து உலாவ)

(நிலைமண்டில வாசிரியப்பா)

வெண்டா நாரிகாய்! கமலா! காணிச் சோலையின்
நேர்மையை யென்னென் நிகழ்த்துவன்?
புள்ளினம்
பாடலும், கதிரவ னிளங்கதிர் பரவி
யோடலும், அதனால், உலகப் பொருளெலாம்
5 நெஞ்சகங் கவரு நிறங்கொள நிற்றலும்,
கிஞ்சுகந் தம்முட் கொஞ்சுகின் றாடலும்
வையகத் துறக்க மென்மயங் குவிக்கும்.

செங்க : ஐயமென்? அம்மணீ! அதோபார்! பேடைப்
புறவினை யாண்புறு, பொன்றுத லில்லா
10 அறமது புரிந்தோர் ஆடகப் பைம்பூண்
தெய்வ மகளிர் தம்மொடு சேர்ந்து
மெய்வளர் கலவி விளைப்பதைப் போன்றே
கூடுதற் காணாய்! ஊடுத லுடனே

வெண்டா : ஆமாம்; அறிந்தேன். அஃறிணை யுயிர்க்கே
15 ஏமம் பெரிதும் இயற்றினன் வல்லான்.
உயர்திணைப் பொருளாம் மக்களே படைப்பில்
உயர்விலாக் கடையர்; உவப்பினை யறியார்;
எதிருறு நிகழ்ச்சிக ளெண்ணியே நலிவர்,
விதியினை நோவர்;—

மணிவ. (தோன்றி)

மேதினி யதனிற்
20 கண்டதே காட்சி! கொண்டதே கோலம்!
மண்டலப பெரியார வழுததிய வெலலாம
சிறியோா தம்மைச செறித்திடச் செய்தீ
பொறியெனல் வேண்டும. பொற்கொடி!
பெரிதும்
உண்மை யுரைததன; உணர்ந்தனன் மிகவும்.
25 இருவே முளளமு மிணைநதன ஆகலின்,
மருவியே வாழ்நது மன்னிட லாமே.

வேண்டா: (திடுககிட்டு நோககி)

மணடலச சோழ வளளலத மமைச்சே!
கெணடையங கணணியா கிளவிகள யாவும
பேதமை மிகக கோதுக ளென்ன
30. ஒழிபபதை விடுத்துக களிபபுட னெத்துப்
பாடுவ தானமைப பண்பினுக் கிழுககாம்.
(செஙகமலததை நோககி)
ஓடரிக கணணய! ஒணடொடி கற்பக
வல்லியாம் நமது மெல்லிய லரசி
பளளிவிட டெழுநது பகலவற றொழுதிடும
35. பளளியிற புகவே பாஙகுடன தேடுவள்.
செல்வோம, விரைவினிற, சேயிழாய் வாவே!

(இருவரும செலல)

மணிவ: (எதிாமறிதத)

முல்லை முகையினை நலமெழிற் படவே
பவளவள ளததிற் பாஙகுற நிறைதத
தவளவா ணகையுடைத தையலவெண
டாமரைத
40. திருவாம வாணியின சிறபபெலாங கொண்ட
திருவே யனையளின் திகழுநீ லோறபலக
கடகடைப் பாாவையைக் கண்டது முதலாக
கொணடனன் காதல். விண்டிட வழியிலை க

கண்டிட லின்றியே யிருநெடுங் காலம்
45 கொண்டனன்: உண்மையின் கண்டநற் கனவாய்
பெண்டகாய்! இன்றே பிறவியின் பெரும்பயன்
வாய்த்திடப் பெற்றேன், மங்காய்! நினது
வாய்மொழி யதனை லப்பயன் மன்னிடச்
செய்தனை யுய்ந்திடச் செய்திடு தேனே

வேண்டா: 50 அரசப் பதவினும் உயரிய வறிவினும்
பாசிடும் பெருமைப் பண்புகள் வாய்ந்த
புலமைசா லமைச்சே! புகழ்மிகு காதல்
நிலைவாய்ப் பெருமணம் உயிரிலாப் பிணமாம்.
அதனை நீ ரறிவீர்! ஆகலிற் காதலில்
55 பதர்ப்படா மென்னை மறந்துமற் றொருநற்
கன்னிகை தனைநீர் நண்ணிட லழகாம்
அரசியா ரென்னை யழைத்திடு சமயம்
நெருங்கிய தப்பால் நின்றென் வழியினை
விடுவீர்!

(விரைந்து ஒருபக்கம் பாய்ந்து செல்ல)

மணிவ: (வியப்புடன் நோக்கி)

விண்ணாங் கனையவெண் டாமரை
60. நடுவயா நாயகி! நற்காத லில்லா
மதலையோ! வடிவிலா மதனற் குறுதியை
இதமுறச் செய்திடு மேந்திழை யலையோ?

(வெண்டாமரை மறைய அங்கு வெறுப்புடன் தன்னை நோக்கிக் கொண்டிருந்த செங்கமலத்தை நோக்கி)

வாராய், கமலா! மாதிவள் செய்தி
யாதாம்? அறிவைகொல்?

செங்க: (சினத்துடன்)

அறிவேன் சிறிது
65. ஆயினும், உம்மை அறிவேன் பெரிதும்!
நறுமண நுகராது நயனில காலை
மறுமலர் நாடும் வண்டின் மனையதும்

வேறுமொழி யெவரே விடையெனக் கொள்வார்?
அறிவொடு நடைபெ றாரெனின், அதனால்
70. அறிகிலேன். நம்முடை பரநடைய
பொய்ம்மொழி
மெய்யென நம்பி விலையிலா மணியாம்
தையலர் குறைபடும் மையலி லாழ்ந்து
தொலைத்தேன். அதுபோல்; தோகைய ரவரும்
தொலைக்கா அன்றியும், தொல்புகழ் வாணியை
75. அணையநற் கலவி யகத்தமா அவளை
அணைபயீர் முயல்வதும், அழகுடை மொழிகளால்
மயக்கிட முயல்வதும் வான்தா மரையைச்
சூடிட முயன்ற தொல்லறி வொக்கும்.
வெண்டா மரையின் வெண்புக ழன்ன
80 சேர்நலே யன்றிச் சிறுபுன் காக்கை
சேர்தலு மாமோ? தேமொழி யவளும்
சலமாள மறவற் கொண்டுகொண் டாங்கு
தலைபுகழ் ழேந்தியைக் கருத்திற் காதலாய்க்
கொண்டனள் வீணை குவைபத் திற்கினி
85 இலையாக் கிட்ட வெழிற்கந் தபோன்றே
இரும், இரும், என்பழி எளிதல! சென்று
வருகுவன் அரசி மலர்ப்பள் ளியெழுச்சி
அறிவிக்கும் வாச்சிய மதிர்கிற தன்றோ
(சென்று ஒருபுற மறைந்து நிற்க)

மணிவ. (தனிமொழி)

தெரிவைவெண் டாமரைச் சேர்க்கையை வேண்டி
90 அரிவை யிவள்தன் பகையு மடைந்தேன்
ஐயோ! இவட்குமுன் வலக்கை யடித்துச்
செய்தசூழ் மொழிகளைத் தேமொழிப் பார்வையால்
மறந்தேன். அவளோ மறுத்தெனை யகற்றிப்
பஞ்சைப்புக் கழேந்தி பாற்காதல் கொண்டு
95. விஞ்சிப்பே சுகின்றுள் வீணைப் புலவனைப்
பிடித்தாற் கற்றை; விடுத்தாற் கூளம்
அவனையிங் கிருந்து வெளியே யனுப்பித்

தவளவா ணகையுடைத் தையலின் காதலைப்
பெறவே முயல்வல பேதையே னிதனைச
100 சிறிதுநான் முன்னர்த் தெரிந்திருப் பேனேல்,
வறிதே சிறையிடைப் புலவனை மாணிடச்
செய்தின் புறுவல. ஆயினும், சிறுநொடி
எய்துமுன, அவனை எழுகாத தொலையே
செல்லும் படியாய்ச செய்குவன். சூழ்ச்சி
105 வல்லமை யாரும வழுத்தியின புறவே

(செலல)

சேங்க (வெளிப்பட்டு)

அந்தோ! சோழியன்! யாதோ செயது
மைந்தமை புலவனை மடந்துவன போலும்!
இன்றிவன செயதிசை யாவென வறிந்து
நன்றியான செயதே நறபழி வாஙகுவல,
110 ஆடவா பெணகளை பலட்கியரு செயமுறை
நீடவே செயகுவ னுடபருமை வியசகவே

(செலல)

(காட்சி முடிகிறது)

(மூன்றவது அங்கம் முற்றும்)



# நான்காவது அங்கம்

---

## முதற்காட்சி

இடம் : முரணை நகரினை யடுத்த காடு

காலம் : பிற்பகல்.

நடர் : புகழேந்தி, சந்திரன்சுவர்க்கி, மகிழ்மொழி வலவன், மாயவன், படைவீரர்கள்.

(நிலைமண்டில வாசிரியப்பா)

புகழேந்தி (தனியே நின்றுகொண்டு)

கொடுங்கோல் மன்னன் குலவிடு நாட்டிற்
கடும்புலி வாழுங் காடே நன்றாம்
கள்ளங் கபடு கரவுகள் சூது
பொறாமை யாணவம் பொய்ம்மை முதலாக
5. கடுங்குண நிறைந்த கடிநக ரதனினுங்
கொடுங்கா னாகிய நெடும்புகா வெளியிது
பெரிது நெஞ்சிற் பெருமகிழ் வூட்டி
அமைதியை யளிக்கு மருமையென் னென்பேன்!
அமைதியின் மக்களே யந்நக ரதனில்
10 வாழுதற் குரியர். மற்றைய ரெல்லாம்
வீழ்தற் குரியர் மெய்யிது, சரதம்
வேலியே பயிரை மேய்ந்தநல் லாறுபோல்
சாலிகன் றன்னுஞ் சார்துணை யமைச்சரும்
சோழநன் னாட்டினிற் றுளக்கமின் மாந்தராய்
15. வாழநே ரிட்டது மாநிலஞ் செய்த
தவப்பயன் குறைவே. தனியர சாண்ட
தவக்குலோத் துங்கன் றவறுக ணிறைந்த
ஆட்சியைச் சீர்திருத் தாமலே, கூத்தனை
ஆட்டுவிக் கின்றகைப் பாவையா யமைந்து,
20. கமரிற் கவிழ்ந்த பசுப்பால் போன்று,

வறிதே யரச மாண்பினைக் கெடுத்தே,
எளியாராகக் குதுகலியா யியக்குதல் விடுத்து,
தெளியார் போலத் தியங்கிட லியல்பே!
நெருந லிரவினி னோர்மையா யென்னுடன்
25. குழந்தை யாடிக் குலவிய துங்கனை
மாற்றியே பெரும்பகை மனனுற வைத்த
கூத்தன் மொழித்திறங் கூறுறு வியப்பே!
அந்தோ! மணிவண னன்புஞ் சூழ்ச்சியு
மிலவேல், எமனகர்ச் சேர்ந்தியா னிதுவரை
30. பலவாங் காட்சியும் பார்த்திட லாகும்
மணிவணன், பாரிடன் மாண்புற வமர்ந்த
மணிவணன் போன்றே மதியிலேன் றன்னை
இருமுறை காத்தனன் என்னே! அவன்றன்
பெருந்தகை! மகள்பாற் பெற்றபே ரன்பு!
35. துங்கன் விருப்பப் படியே துணிந்தியான்
அங்கிருந் துயிரினை யகற்றிட நினைந்துபோ
தேங்கியே வருந்தி யெனைவெளி யேற்றிய
பாங்கியே போலப் பருவரன் மிகுந்த
அன்னனைப் போல்பவர், இந்நா னிலத்தினின்
40. மன்னிட லரிதாம்
(எக்காள வொலி கேட்டு)
மாவொலி யேயோ?
மாகட லொலியு மயங்குகின் றனவே!
எக்காள வோசை யிதுவாம் என்னே!
அமைதியாங் காட்டினை யழித்திட வரசர்செய்
வேட்டம் போலும்! நாட்டினி லுள்ள
45 கொடுங்குண விலங்கினைக் குமைத்திட வியலா
வடுங்குண வரச ரடவியி னமைதியை
யொழித்திட முயலு மொருபெரும் போக்கினை
யொழித்திட முயலு மமைச்சரு முண்டோ!
அதோ! சில மறவ ரரும்படை யுடனே,
50 மதோன்ன மத்தராய் வந்துகொண் டுள்ளார்,
துங்கனின் வீரராய்த் தோன்றிடற் றுயராம்,
இங்குள புதரி லிருந்தே மறைந்து,

தப்புவ லியாதெனச் சிந்தை கலங்கி
வெப்படைக் கண்ணிலும் மிகக்கொடு கானும

(புதரின் மறைய)

மகிழ்மொழிவலவன்

(மாயவன், பண்டவிரா முதலி வீரர்களோடு தோன்ற)

55. அன்பர்காள்! அரசனை யகலவே விடுத்தே
யின்புற யாமிங் கிருமபடை யேந்தி
யறிந்தே திரிதரற் கெரிதே பிழையாம்.
மன்னுவ நாட்டினை வளர சியலான்
வள்ளுவர் நாட்டை மதிவலோர் புகன்றிடுத்
60 தெள்ளுமை தமிழமுதத் தெவிட்டா வழிமொழி
யாவரு முணர்ந்து, பேசிற் பிறருக்குச்
செய்து, தன் னாட்டினைச் சுவர்க்கமாச் செய்து,
சுவர்க்கி யென்ற தொலைபெயர் பெற்ற
சந்திர னிலாவிய தனிப்பெருங் காடு
65. பகலே யெனினும் பாழ்ந்திருண் டெனக்கே
யிகலே விளைத்திடு கின்றது பாய்புலி
பின்னாகச் சென்ற மன்னவன் செய்தி
யாதோ? அறியேம்! அதோ! அக் குன்றினின்
றோதா தாரத முணாவி ளேகினை
70. மான விழிகதே வருமவ் வேங்கையின்
விரைவினைக் காணுமின்! மேலும், நம்மையது
நோக்கியே வருவதை நண்ணிதி னுணர்மின்!
வாக்கிற புலியே றனையான் வருமிப்
புலியின் முககாம போக்கினைப் பொறுத்துக்
75. கிலிகொளா திருக்க கில்லேன் நெடும்புத
ரிதனின் மறைந்தே யிருப்பல, சுவர்க்கியா
மிதனை திருப்பின, இவ்வணம் பதுங்க
வேண்டுவ தின்று

(புகழேந்தி மறைந்திருந்த புதரிற் புகுந்து மறைய)

சந்திரன்சுவாகி

(குதிரைமீதேறி வேங்கையொன்றினை விரட்டிக்கொண்டே)

வீரர்காள்! அதனை
ஈண்டியே பறிமின! இற்றைப் பகலாம்

பொன்னனைத் தன்றி வரப்பனை யிறப்புகும
130 அலவனே யாரிர்!

மகிழ்மோ (ஏளனத்துடன)

அட! அப படியல!
இங்குள நீவிரெல லிரு மிருகை
சங்கத் தொனியெழுந் தட்டி நகைக்கச்ச
செய்து மகிழமொழிச சேவகன யான்காண!

சுவாக்கி: ஆ! சோ! குபபுந் தொடுங்கியோன் மீசையில
135 வாகாய் மணப்பிக வாயததிட வில்லையெனுங
கவதயினை யினறே கணடனம திறக, இக்
கதையினிற றோன்றிய விதையினைப போனறவிப்
பெரியா ரெவரோ? பெரிதுங கல்வியிற
பெரியா ரெனவே பேசிடு மிவாமுகம்!

மாயவன்: 140. ஆமாம, அரசே! இவாமுக மெனக்கும
னெங்கோ கணடுரை யாடி யிருப்பதாயச
சங்கையிற படடுத தடுமாறு கின்றது!

(சிறிது நேர மெண்ணி யிருக்க)

ஆ! நா! உணாந்தேன! உணாந்தேன! ஆ! கா!
பாகே னனிசொரி பைந்தமிழப பாக்களான
145 பராகரம பாணடியன பல்லவைக் களததே
தராதல மெச்சிடு தணமதி யாய
புகழேந்தி யென்னும் புலவாநன மணியிவா!

சுவாக்கி. புகழேந்தி யாவிவா? புகழுமா றனவையினி
லொட்டக் கூத்தனை, மட்டந தட்டிய
150 மதிவலா ரனறோ?

மாயவன். ஆமாம, மாறன்
றதிவலா ரிவரே! தொலபுக ழிலங்கையிற்
றாதாய்ச சென்று செழியனின் றொல்லா
சதனைக கொறகையி லழகுற நிறுததிய
நாவல ரிவரே! பினபு, சோ ணாட்டிற்

155 செழியன் விருப்பப் [illegible]ப சென்று,
சிறையக னேர்ந்த சி[illegible]கு[illegible] மக்களை
முறையகக் கல்வியான் முற்குடி மக்களாய்
மாற்றிக் கூத்தனை [illegible]ள வளவையினிற்
காற்றிற பூளைபோற் கலங்கிட நெருநற்
160. கண்ட தமிழ்முனிக் கற்கண் டிவரே.

மகிழ்மோ: குறுமுனி யிவரே! குறுநகை யதனைக்
கண்டவப போதே கொண்டனு னையம்.

சுவர்க்கி: (இரு கைகளாலும் புகழேந்தியின் வலக்கரத்தைப் பற்றிக் கொண்டு)

தமிழ்முனி யனைய தனிப்புக ழேந்திய
தமிழ்மொழிப் பெரியீர்! தமையின றறியப்
165 பெற்றவென பெருமை பெருகுவி யாழினைப்
பெற்றவின் னவன்றன் பெருமையின் மிகுமே!
கற்றவா மணியே! சறபிலா ஊராக்காதனு
சுற்றமோ டிழந்த தொழின்மிகு மிக்கொடு
வனத்திடைத் தங்க நேர்ந்த வழக்கென?

புகழேந்தி: 170 அனத்தினைப் போன்றே யாவன கொண்டு
போவன விலக்கும் புதுமைசா லரசே!
நாவல னாயினு நல்லூ ழிலலாப்
பாவலன் யான்காண்! ஆகலிற் படிமீ
தாவலகொண் டரசரை யணுகிடல் வெறுத்துத்
175. தவமே புரிவான் சார்ந்தனன் வனமே.

சுவர்க்கி: சிவமே யனையநற செநதமிழப புலவீர்!
அவமே யாகநும் புலமையை யழித்த
றமிழ்த்தாய்க் குச்செயுந் தவற்றினிற்
பெரிதாம்.
குலோத்துங்க னெட்டக் கூத்தராற் கொண்ட
180. வலோத்துங்க வன்பான் மதித்தில னும்மை.
ஆயினும், பெரியீர்! அதன்பொருட் டெந்தந்
தாயினு மிறந்த தமிழ்ப்புல மையினை
வறிதே காட்டினின் மலாநதநன் மலரென

வறிதே யாக்கி மயங்கிட லொண்ணு (து).
185. எம்மவை புகுந்தே யெம்மனோர் நெஞ்ச
மமர்நோய் மாற்றி மன்னுவ நாட்டினைத்
தெள்ளுநற் றமிழ்மிகு செந்தமிழ் நாடென
வளர்த்திட வேண்டினன்

புகழேந்தி : மாசிலா மணியே!
“உளவனின் சினத்தான் மறைந்துறை கிலையேன்
190 றன்னைக் கொண்டாடச் சொன்னவன் பகையா
மின்னலை யுற்றே பிரிந்திட லாகும,”
எனப்பகை யெண்ணியே பேசிட லினிதாம்.

சுவர்க்கி : உளவனின் சினமாம் பாதகம் மறவேல்?

புகழேந்தி : அளவிலாப் பகைவன் சினம்! களவிலை யென்பால்!
195. ஒட்டக் கூத்த னேதுமே யாவும்
திட்டமாய் யானெதி ரிங்கு மறியேன்!

சுவர்க்கி : இவ்வள வன்றேல் இதற்கோ வெண்ணம்?
செவ்விது! வன்மனச் சிறுமொழி கட்கொலாஞ்
செவிகொடான அறிவேன் சீர்த்திசால் பெரியீர்!
200 புவியினி லுமது புகழுமென் புகழும்
நிலைபெறத் தமிழ்த்தாய் சிலையுறச் செய்வோம்

மகிழ்மோ. : சிலையுறச் செய்வோம் ஆனாற் கதிரவன்
கலையுருன், குடகடற் கண்டான். அருணனுந்
தோன்றியே தேரினைத் துரத்துகின் றுனம்
205. மான்றோ பலவு மாநகர் நோக்கி
விரைந்தே கின்றன

சுவர்க்கி : விடேனென மாலையும்
நிறைந்தே சூழா நிற்கும் விரைவினில்.
தமிழ்முனி யனையீர்! சாருமித் தேரிற்
லமாவோம் வருவீர்! அகநகர் புகவே.

(யாவரும் போக)

(காட்சி முடிகிறது)

# நான்காவது அங்கம்

## இரண்டாங் காட்சி

இடம். சோழன் அரண்மனையந்தப்புரம்.

காலம்: முன்னிரவு.

நடர்: வெண்டாமரை, செங்கமலம்

(ஓரறையில் வெண்டாமரையும், செங்கமலமும் வீற்றிருக்க)

(நிலைமண்டில ஆசிரியப்பா)

வெண்டா. (துயருடன்)

வாராய், கமலா! மனத்துயர் யாதெனக்
கேட்டனை யன்றோ? வாட்டடங் கண்ணி!
யாதென வோதுவன்? காதலென் றியம்புஞ்
சாதற் றன்மைய வேதனை நெடுநாட்
5 பட்டேன் இன்றது பழுத்தே பயன்றான்
கிட்டு மெனவே கிளர்ச்சியுந் திருக்கக்
காதற் கனியது காணுதற் கரிதாய்
மறைந்தது. போய வழியது தெரியேன்,
உறைந்தனன் பெரிதும், காரிகாய்! இதுவே
10. யெனதுய ராகும்

செங்க: ஏந்திழாய்! காலையின்
மன்றனை யான மணிவண் ணற்குரைத்ததென்?
காதலின் மதலையாக் கழறினை யன்றோ?

வெண்டா: மாதே! ஆமாம். மணிவண் ணற்கியா னொரு
மதலையே

செங்க: மற்றியா னின்வாழ் விற்கே
15. யுதவிட வுரியார்? ஒண்ணுதால்! ஓதுதி!

வேண்டா : (கண்ணீர் த்துளிகளை சிந்தியபடியே)
நங்காய்! குழந்தை நாட்களி லேயே
பங்கமில் பெற்றோர் பரகதி யுற்றிட,
உற்றா ருறவினர் பற்றிலா தெனபா
னெருங்கா தேகினர் நீணிலம புரக்கும
20. பெருங்கா தலைப் பிறங்கிடு செழியனின
நற்றவ மகளார் நலமுள் கறபகப
பூங்கொடி யன்பிறுற் பொலிந்து சிறந்தே
வளர்ந்தே னிதுவரை ஆயினென மனக்கோ
ளளந்தே புரிதுணை யாதர விலலேன்
25 அரசியோ வெனபா லளவிலா புளளாள
பரசியென கருத்தைப பகாந்தா ளுடனே
செயகுவள நாணாநாச செறிதெனை யடகக
ஙகுவே னுகி நாட்பல கழிததேன.
இனறென கருத்தை யியமபியென றுயரைப
30 பென்னா னவிச திடவே புரிந்தேன அதறகுள,
நெருஙகியே நினற நிகரிலா வககனி
ீருஙகியே மறைந்து தோறறமின ருயது.
எஙகையைப போனீ யேநதிழாய்! எனக்குப்
பங்கமி லுதவி பண்ணுவை யென்றே
35. யாதோ வொனற தேர்தா னினறது.
மஙகாய்! கேடபாய! மனமெனு மேடையி
லொரந்த கனியதை நீயு மறிகுவை!
கல்வியிற பெரியது! காடசியிற் சிறநதது!
நலலறி வினிலோ நலமிகு வியாழனும
40 பினனிடச செயயும பெறறிய தனறே!
நென்னை லிரவினி னிகரிலாத தமிழ்மழைப
பொழிவாற பெருககிய வூசற் புனலது!
கழிபே ருவகைக கடலி னகததது!
இன்றதி யாணடோ சென றது! தெரியேன!—

சேங்க - 45 அறிவேன! அமமணீ! அஃதிவ ணானற,
பரிவே காலையிற பகாநதகின் மாறறமே
மணிவணற னணடி வஞசகச செயலால,
துணிவிலாப புலவரைத தொலைத்தது, வெளியில

மணிவண்ணனின் மனத்துறை காதலை
50 யெங்ஙனே யறிந்து புலவரை வெளிதா
யெங்ஙனே கூறி மிரட்டியிவ் விடத்தை
வெறுக்கவே செய்து விரட்டினன், காலை
யுருக்கமா யவர்பான் மறைபல வோதிடக்
கண்டனன். மேலும், கண்டனை யின்றையப்
55. பகலெல்லாம் மணிவணன் பகருநன் னயமொழி.

வேண்டா. (சினத்துடன்)

ஓ! கோ! அவனு வொப்பில்லா வைப்பினை
யெகவே செய்த மோகமா மடையன்!
அன்பினை பகற்றினு மகத்துறை யன்பினை
அகற்றவொண் ணாதென வறியான், அறிவிலி!
60 பகற்பொழு தெயினும் பண்புறத் தெரிவனேல்,
அரசிக் குரைத்தவ னமைச்சினை யறிவல!
ஆயினென, நானோ யவனிவ் வாண்மனை
மேயிடா வண்ணம் வேண்டுவ செய்வல!
காணடியென் திறமை! காரிகாய்! மிகவே.

செங்க (சிறிது முகச்சுளிப்போடு)

65. ஆமாம், அவனை யழித்தலே நன்றாம்.
ஆயினும், புலவரை மேயிடும் வரையிற்
பொறுத்தலே யறிவாம். பொறியிலி மேலும்,
கழுத்தமே புலவரைக் காணுறு வகைசெய
விடுத்திட வொண்ணு.—

வேண்டா : விளங்கிழாய்! உரைத்தனை,
70. அடுத்திடு முண்மையே. அவனறி வின்றியே
புதையலை நாடிடப் புகுவேன். நாளைக்
காலையி லெனக்குக் கார்குழால்! ஆணுடை
யொன்றது தேடிக் கொணர்வாய்! உதவிய
நன்றியை மறவேன், நாடபல செலினுமே

செங்க (மகிழ்ச்சியோடு)

75 தெரியிழாய்! கொணர்வல. சிறிதும் பின்னிடேல்!

அரிவைநீ யானுடை யணியினைப் மகளும்
புரிகுவனை யோகம, புரிகுவ ரெவரும
புகன்றவப படியே வைகறைப பொழுதி
லகன்றிட வானுடை யமைத்துமே வைபபல்.

வேண்டா: 80 ஆ! கா! உனனுடை யன்பே யன்பு!
மாகா திபனன் மருகனு முருகன்
அருளால விரும்பிய தனைத்தும பெறுநீ
பொருளாற் குபேரனைப் போன்றே பொலிகவே!
இறைவிந கிபபொழு தென்செல வதனை
85 புரைத்திடல! பினனா, உசாவுங காலை,
காதலும, செலவும, மணிவனன கபடும
ஓதாய! எனபாற றிதுக ளொழியவே

சேங்க அமமணீ! செபபிய வபபடிப புரிகுவல.
அமமணி முழங்குவ தறிகுதி! அமமணி
90. அழைக்கினு றனனமை யகத்தியம வைகறை
பிழைத்திட லின்றிக காணகுவ னின்னை
மழைக்கணாய்! செலவம, விரைவினில வாவே!

(இருவரும செல்ல)

(காட்சி முடிகிறது)

# நான்காவது அங்கம்

## மூன்றாங் காட்சி

இடம் : சுவர்க்கியின் கொலுக்கூடம்.

காலம் : முற்பகல்.

நடர் : சுவர்க்கி, புகழேந்தி, மகிழ்மொழிப்புலவன், மாயவன் நற்சொல்நாவலன், படைவீரர்கள்.

(சுவர்க்கி புகழேந்தி முதலியவர்களுடன் கொலுவில் வீற்றிருக்க)

(நிலைமண்டில வாசிரியப்பா)

சுவர்க்கி : (மாயவனை நோக்கி)

ஒன்னார் நாட்டு முயாப்படைத் தலைவ !
முன்னாங் கூறிய முறையே யொழுங்காய்ப்
படையினை யமைத்துப் பயிற்சியுங் கொடுத்து
நடையுறச் செய்கினை றனையோ ?

மாயவன் : நாயக !

5. வழுத்திய படியே மாபெரும் படையினைப்
பெருக்கியே வேண்டும் பெருந்திறப் பலவும்
பயிற்சியான் மிகுத்துளேன் பாரினின் மேருவே
யெதிர்க்கினு மஞ்சிடேன்

சுவர்க்கி. ஓ ! கோ ! இணையிலா
வீரனே ! நாமதைக் கண்டிட மெத்தவும்
10. விரும்பினேம் கொலுவினை விட்டபின் படைக்களம்
புகுவோம்.

(புகழேந்தியை நோக்கி)

பாண்டியன் போற்றவே யரசியற்
புகழ்மிக வேந்திய பொய்யில புலவீர !

அகழ்கடல் ஞால மகன்றுள தறிவீர்
அதன்கண் வாழு மலகில்பல லுயிர்களில்,
15. மதன்வாய்ப் பட்டு வறிதே கழிந்தன;
கழிவன பலவாம். கனவுல கிதனில்,
அழிவினை விலக்கி, கழிவினை நீக்கி
வாணாட் கழித்தன சிலவே அவற்றுள்,
வீணாட் படாவமைந் தூறுமெய் யறிவே
20 கொண்டுள வுயிர்கள் மிகவுங் குறைவே
குறைவா மவற்றுள், புகழ்ந்தே குலவிநாம்,
நினைந்திட வேண்டினம். ஆகலின், நந்திசோ
வன்றிற னனையன வாழ்க்கையைச் சுருக்கி
யழகாய், ஒருநூல் பழகுதொல் காப்பியத்
25. திருந்தமி ழமுதந் தேக்கிட வுண்டு
சங்கத் திட்டுத் தண்ணளி மிகவே
யன்புது பொங்கப் புகட்டிய வருந்தமிழ்த்
தொகைநூன் மருந்தினைத் துகளற வேற்று,
வள்ளுவ ரருளிய தெள்ளுநற் றமிழாந்
30 தலையணி பூண்டு, தாழ்விலா மணியாம்
வாசக நெற்றியில் வாசமார் திலகமா,
குண்டல கேசிநற் குழையா, சிறந்த
சிந்தா மணியே திகழ்மார் பணியா,
வளையா பதியே வளையா வணிந்து,
35. மணிமே கலையினை யணியரை யசைத்து,
திருக்கோ வையினைச் சிறுகுறங் கிடையே
பெருங்காஞ் சியாகப் பிறங்கிடப் பிணைத்து,
சிலப்பதி காரச் சிலம்பினை யுலகெலாம்
சிலம்பிடத் திருவடி சேர்த்துப் புலவர்தம்
40 சிந்தையாஞ் சிற்றிலிற் றிகழ்சிறு காப்பியக்
கழங்கம் மானையாறு களிப்புட னாடுஞ்
செந்தமிழ்ச் செல்வியின் சிறுமுகக்கு வறிதே
காணுத லின்றிக் கவின்முகக் கணியாய்ப்
பூணுத லுறவே பொற்புட னியற்றுவீர்!

மாயவன்: 45 அரும்பெற லரசே! ஆமாம், யானும்
விரும்பினேன், இவ்வண நெருநலே. மெல்லியற்

செந்தமிழ் நங்கையின் வாழ்வே சிறந்தநம்
வாழ்வாம் மற்றவள் தாழ்வே நம்மவர்
வீழ்வாம், அற்குவை மேதினி யதனின்
50 மொழிச்சிறப் பில்லா மாந்தர்முன் னேறுதல்
விழிச்சிறப் பில்லான் விருட் டடத்தலாம்.

மகிழ்மோ : ஆமாம், அரசே! அனைத்தும் வாய்மையே
பூமா தவட்குப் பொருந்துநன் முகமாந்
தமிழ்நா டதனி லமிழ்தென வழங்குந்
55. தமிழ்மொழி தழைத்தலே தாயவள் பேச்சாம்.
தமிழ்மொழி பிழைத்தலே தாயவட் கேச்சாம்;
உலகவர் நம்மை யலகையா வெண்ணிப்
பலகவா மொழிகள் பகர்ந்திட வழியாம்.

புகழேந்தி: அமிழ்துறழ் தமிழ்மொழி யதனையே யுயிரென
60. இமிழ்கடல் ஞாலத் தெண்ணியே மன்னுவ
நாட்டினைப் புரக்கும் வாட்டமி லரசே!
காலமாங் கள்வனம் முதியரிற் கணக்கிற்
சாலவாம் பலநம வாழ்க்கையைச் சதியாய்க்
களவுகொண் டெவருங் காணொணு வகையே
65. மறைத்துமே வைத்த வஞ்சகம் போல,
நமதுநல் வாழ்க்கை நாட்பல வெதிர்கா
செலினுங் கவராத் திறமைய தாகவும்,
செந்தமிழ்ச் செல்வியின் சிறுமூக் கதனி
னந்திடு வயிர நன்மூக் கணியா
70 நளவெண் பாவா நற்சிறு காப்பியம்
வளனுற வகுப்பல, பழமையாம் பின்பெயர்
கதிர்மதி நிலவிடுங் காலம் வரைக்கும்
புதுமதி யெனப்புகழ் புவியினிற் சிறக்கவே.

நற்சோல் நாவலன் :

முரணைநன் னகரினை முரணிலாச் சுவர்க்க
75. வரணதா வமைத்த வரசநன் மணியே!
நின்னரு ளாலிம் மன்னுவ நிறைநதோர்
பொன்னும், மணியும், தூசும் பொலியத்
திருமக டிருநோக் கருள்மிகச் செறிந்துளார்.

ஆயினும், அன்னவன் மருமக ளாகிய
80. கலைமக ளருளினைக் காணு தார்பலர்
விலையிலாப் பதமென விளக்கமின் றுள்ளார்.
அன்னார் தம்மைநந் நனைப் புலவர்தரு
சார்பால் விளக்கிடுந் தகைமையு நம்மான
மேற்கொள வேண்டிய விலக்கரு நெறியாம்,
85. என்பது திருவுள மியம்பிடா தறியும்

சுவர்க்கி : மன்பதை வாழ்வே மன்னாதம் வாழ்வெனக்
கண்படை கொள்ளாக் கவினுறு மமைச்சே!
உரைத்தன வாய்மை ஒருபெரும் புகழ்மை
பெரியார் தமது பேருத வியினால்,
90. நந்நா டெங்கு நற்றமிழ் மணமே
முன்னூ ழி முதற்சங் கத்தினிற்
றிகழ்ந்தாற் போன்று திகழ்ந்திட வுனக்கே
யுரிமை யளித்தனன் ஒப்பரு தமிழ்மொழி
விரிவுறப் பரப்புவாய்! விண்ணும் வியக்கவே
(படைத்தலைவனை நோக்கி)
95. மாயவ! நமது படைக்கட மாட்சியை
நேயமாய்க் காண்பாம்.

(மற்றவர்களை நோக்கி)

நேரவை மாந்தர்காள்!
கொலுவினைத் தீர்த்தனன். கூடுவோ மினியே.

(கொலுக் கலைய)

(காட்சி முடிகிறது)

# நான்காவது அங்கம்

## நான்காங் காட்சி

இடம். முரணை நகரை யடுதத காடு

காலம்: அதிகாலை.

நடர்: புகழேந்தி, உழுவலன்.

(நிலைமண்டில வாசிரியப்பா)

புகழேந்தி : (தோன்றித் தனககுள்)

சிறுபொழு தாறனுட் சிறந்திடு வைகறை
யுறுபொழு தேபெரி துகத்தற குரியதாம
உலகத தொலலையி னெழில்வாம வீடுற்றுப
பலவா மனககவறை யொழித்துப பண்புற
5 வுறஙகியே விழிதத வொபபற் றவகறை
பிறஙகிடு பெருமையைப பேசவென் ஞெருநா
பறறுமோ? பற்று. பகார வரசுபோற்
பெறறுப பனுைப் பேசிட றகவாம.
உடறகு முயிாக்கு முறுதியை யளிககும
10 விடியலொன் றின்றேன் மேதினி மாநதர்
மடியராய மடிவா வானிலே பறககுமிப
பறவைத தூக்கமும, பாடிடும வானப
பறவைதன் பாட்டும், பைங்குயி லிடைககிட
கூவிடின குரலும், பூவையின் மொழியும, ;
15 கிளியின கிளவியும,கிள்ளொைப் புள்ளினச
சிலமபலுங கேளாச் செவியினைப் பெற்றேன்
புலமபலே யுறற புன்மைய னன்றோ?

(ஒரு மரத்தடியினை நோககி)

அதோகாண் ! ஒருவன் விடியலி னருமையை
ஓதான் மலாநதே யுன்மதத ஞைக்

20. கண்வளா போக்கினை! காட்சியி லவன்மிகப
பண்வள ருடையும, இளமையும், பாங்கும,
அழகு மொருங்கே யமைந்தும வீணே
பிழகிய குறையாற பகலவற் கண்டு
முறஙகிட லாயினன். ஒ!கதி ரொளியாற்
25. பிறங்கிடு மவன்முகப பொலிவின் பெருமை
யென்னென வுரைப்பன்! இன்னும மீசை
யரும்பிடா விளைஞன!

(அருகிற செனறு)

பெரும்பட ருறறே
க்ாததனன் போலும்! சளைததது வதனம!
என்னே! உறககத தெழுநதிடு முயிரப்பின
30. மூனனரு சிறிது முன்னுறக காணகிலன!
மூாசசையோ? சாவோ?
(மூக்கிற சைவைதது நோககி)

மூர்சசையே! கொடுமை
பெருநதுயாக் கடலிற பேதுற றவன்காண்!
மருநதிதற் கியாது? மாநீ ரதனினுஞ்
சிறநததென? அஃதோ! தெளிநீர்த தடததே
35 நிறைநதிடு நீரினை நீண்டவித துணியிற
கொணாவல களையினைப போககுவல;
(துணியினை நனைததுக
கொணடுவந்து முகததில தெளிகக

உழவலன்: (மூாசசை தெளிநது தனககுத்தானே)

குவலயப
புகழுநல லன்பே! பொறியிலே னுனனைக
கா ணுமா றென்னே! கவலையாம வரையினைக்
கடககுமா றெனனே!

புகழேந்தி காளையே யனையாய்

உழவலன்: (திடுககிட்டு நோக்கி)

40 காணபதென! கனவோ?

புகழேந்தி. அழுதனன் எனவே
வருந்தல் விடீர்! அருந்திடு நீரே!

(அணியிலுள்ள செம்பைப் பிடித்து வார்க்க)

உழவலன் (நீரருந்தித் தெளிவுடன் வியப்பாய் நோக்கி)

பெரியீர்! பெரிதும் வந்தனம். தமையா
னறிவேன் போலும்! ஆ! கா! ஆமாம்!
அறிந்தேன்! பாண்டியனவைக்களஞ் சிறக்கச்
45. செந்தமிழ் நடத்திய செல்வரீ ரன்றோ?

(நாண் மேற்கொள, தலை கவிழ்ந்து நிற்க)

புகழேந்தி: செந்தமிழ்ச் சிறுவ! செப்பிய துணமை.
மதவே ளனையநீ யாவன? முன் னெங்கோ
கேட்டது போன்ற கிளவிக ளின்பாற்
கேட்டன னின்று. நினக்குள கேடென?
50 "அன்பே! என்றனை! "அடையுமா
றியா(து)," எனத்
துன்புற லாயினை! யாதுநின் கோற்றம்?
அன்பினை யிழந்தா றுன்பது பெரிதே!

உழவலன் (சிறிது நேரம் எண்ணி நின்று)

(குறள் வெண்செந்துறை)

க. ஆமாமென் னரும்புலவீர்! அறைகுவனீர் கேளீர்!
அவனியிலே சிறந்தோங்க ராமதுரை தன்னில்,
ஏமாந்த மறைவல்லா னெனும்பெரியோ னெழிலோ
ரேத்தருநற் குணமாகு மேந்திழையா டனைக்

உ. கூடியவன் பெற்றமகா ரோரிருவர். முதற்கட்
குலம்விளங்க வந்தமகள் குவலயத்தே யறிவு
நாடியிடம் பெற்றகலை நல்வாணி யெனவே
நலஞ்சிறந்த தாமரைவெண் ணற்பெயரைப் பெற்றாள்

௩. அவளுடனே பிறந்தவனியா னன்பினிலே சிறந்த
ஆவலிறை புழுவலன்பன் அந்தோவெம் பெற்றோர்

தவழுகின்ற பருவமதிற் றனித்தெம்மை விடுத்துத்
தயாபரனின் கழலிணைக டம்மையவர் சார்ந்தார்

௪ பாண்டியனும் பராக்கிரமன் பரிந்தெடுத்தே யெம்மைப்
பண்புடனே வளர்வித்தான் பாங்குள்ள வெமக்கை
பாண்டியனி னவைக்களத்தே பழகுதமிழ்ப் புலமைப்
பண்புமிகு முமதுபக்கற் பரிந்தன்பு கொண்டாள்.

௫ காதற்றனை நிறுவியர் சோணாடு கண்டார்!
கார்கையு முமைத்தொடர்ந்து காதன்மிக நிறைந்தாள்
ஆதரவான் அவணினைந்தே யழிந்துநெஞ்சம் புண்ணாய்
அவட்கண்டு மீளவெனை வடைந்தேனிக் கானே.

௬ இங்கானோ தன்னிழலை யளக்கவென வெண்ணி
யிடுகுறியொன் றியற்றுதே யெடுத்தடிவைத் தளக்கும்
மிக்காளின் செயல்போல விடுதிபெறு தந்தோ!
வினையென் கனடையை வீழ்த்தியது பெரியீர்!

௭ இதுவேயென் வரலாறும். ஏந்திழையைக் காண
வென்னிருகண் மிகவிழைந்த வெளியேனை விரைவில்
மதுமலரில் வண்டனைய மலர்விழியா டிருமுன்
மாப்புலவீர்! சேர்த்திடுவீர்! மலரடிதாங் கதியே

௧. கடூநதி ஓ! கோ! வெண்டா மரைக்கொரு பின்னவ
ளுண்டோ? அறியேன்! மயிலவ ளொப்பிலாக்
55 கற்பக வல்லியி னற்பகஞ் செறிந்த
பாங்கி யல்லளோ? பாண்டியன் மனையிற்
கண்டுளேன் சில்கால். கல்வியிற் கலைமகள்!
கண்டுபோன் மொழியாள்! கருத்துமைம் புலனையு
யாற்கடல் வீழ்த்தா வளரறி வுடையாள்!
60. நற்குணப் படையினை நனிமிகப் படைத்தாள்!
அன்னவ டன்னைச் சோணாட் டரண்மனை
நென்னலே கண்டனன். நேரிலா வவளும்
பஞ்சையா மெனப்பாற் பற்றுவைத் தனளோ?
வஞ்சியென் பாலிலை. ஆயினும், மற்றவட்
65. காணு மாற்றினைத் துணையுடன் காட்டுவல்.

…ணை பிவ்விள வெயிலினைக் கொளாது
நகாக்கே புகுவம், நகைமதி யனைய
வதனநற் காளாய்! வருக! இவ் வழியே

(இருவரும் போக)

(காட்சி முடிகிறது)

# நான்காவது அங்கம்

## ஐந்தாங் காட்சி

**இடம்:** சோணாட் டரண்மனைப் பூஞ்சோலை.

**காலம்:** மாலை.

**நடர்:** கற்பகவல்லி செங்கமலம்.

(கற்பகவல்லி மேடைமீது வீற்றிருக்க, செங்கமலம் வெண்டாமரை மலரொன்றினைப் பறித்துக் கொண்டு வந்து கொடுக்க)

(நிலைமண்டில வாசிரியப்பா)

கற்பக: (வெண்டாமரைப் பூவினைக் கண்களி லொற்றிக் கொண்டே)

கமலா! களிப்புடன் நடத்தினிற் கவின்மிகக்
காணுக ஆற்றவித் தாமரை, கடிதடம்
கோணுத லறவே கொண்டது போன்றே
யென்னக மாகிய வெழிற்றட மதனிற்
5 பொன்மலர் நாற்றம் பூண்டது போன்று
பொற்புங் கற்பும் பொருந்தியே மலர்ந்த
வெண்டா மரையினைக் காட்டியா மெனக்கொடுத்
துண்டா மாறே கொண்டா ரியாரே?
கோதறு மவள்முகந் தீதறு மிந்நாட்
10 காலையி லிருந்து காணு தென்மனம்
வேலையிற் றுரும்பென மெலிகிற ததந்தோ!

செங்க: அம்மணீ! வீணே யவல முறற்க!
செம்மணி யாகிய செல்வியா மவளைக்
கொள்வா ரெவரே? கோமக னாட்சியிற்
15. கள்வரு முளரோ? காரிகை பன்முறைக்
காதற் கிளவிகள் கலக்கமுற் றோதிடக்
கேட்டேன். அன்னாள் கேழ்கிளர் காதலர்
நாட்டேன் மலரென நாற்கவி யிசைக்கும்

இசைபயுக ழேந்தி யெனவவக் கிளிகள்
20 இசைத்தன, இசைத்து மறைத்தன ளெமக்கு
கென்ன லெப்புலவா நேடார் தமைப்போல்
நன்னய மின்றி நடந்தனா புறத்தே
அதுமுதற் கொண்டே யரிவைவெண் டாமரை
வெதுவெதுப் புள்ள மேனிய ளாகித்
25. தனியே தங்கினள், தனியே மொழிந்தனள்,
"கனியே! கரும்பே! கண்டே!" என்ற
மொழிக ளிடைக்கிடை மொழிந்திட லானாள்.
கிளிமொழி விழிக ளுறக்கமே கிட்டில
பாயலிற் புரண்டனள், நோய்மிகக் கொண்டனள்,
30 "யாண்டுனை நாடுகேன்? ஆண்டகை மணியே!"
என்றே நேற்றிரா விசைத்தனள் பன்முறை
குன்றா வுறக்கக் கொடுமையா லிவற்றையான்
றீதா மென்றே சிந்தியா தயர்ந்துப்
போயினேன் காலையே மேயின தறிந்தேன்.
35 ஆகலின், அம்மணீ! தோகையா மவளுங்
காதலற் றேடியே போதலைக் கொண்டாள்,
எனவே யெனக்கோ ரெண்ணங் காலையே
மனவே தனையோ டுதிக்கமற் றதனைப்
பலாமுன் பகரற பழுதா மென்றே,
40. அலர்பூங் கொடியாய்! அடக்கின னிதுவரை.

கற்பக அங்ஙனை யேயோ? அறியேன் சிறிதும்!
பைங்கொடி யவளும் பகுத்தறி விழந்தே
புறத்தே சென்றது பொல்லாப் பிற்கிடம்;
அறத்தா றுகா முன்னரே யறிவனேல்,
45 முடித்தவள் மனத்தே மகிழ்ச்சி முளையாம
பாலிகை விளைபபல் பாவம்! உலகிய
லறியா விளங்கொடி தெரியாத் தன்மையற்
றுணிவினைக் கொண்டாள! தொன்மையா முலகப்
பெருங்கா டதனிற் பிறங்கிடு காமுகப்
50 பேய்களாற பெரிதும் பேதுற லாவள்!

(வெண்டாமரையை நினைந்து)

"அந்தோ! பொற்கொடி! ஆருயி ரனையாய்!
நொந்தேன் பெரிதும்! நுண்ணூன் மதியாய்!
என்னே! உன்செயல்! காதலா லியாவு
மிழந்தனை போலும்! ஏ! ஏ! காதலின்
55. வன்மையே வன்மை! மனத்துள வேதனையும்
இன்மையாய்ப் போக்கிப் புதூ ராவிற் றிருக்கும்
காதலே! நினைவிகா காண்பது மாமோ?
காதலாற் சாதலே கடனெனத் துணிந்துபின்
போதலைக் கொண்ட பொற்றொடி வீணே
60. சாதற் குரிய தகைமைய ளல்லள்.
ஆதலின், இன்னே அரசன் தானைகொண்
டோதற் கரிய வொருபுக ழேந்தியோ
டாதற் குரிய வலையுங் கொணர்ந்து
மணத்தின் புறவே வைப்பல; கமலம்
65 மணந்தான் முகன்வெண் மலரவள் மானவே.

(இருவரும் செல்ல)

(காட்சி முடிகிறது)

(நான்காவது அங்கம் முற்றும்)



# ஐந்தாவது அங்கம்

## முதற் காட்சி

இடம்: சுவர்க்கி யரணமனையில் ஓரறை

காலம்: பிற்பகல்.

நடர்: புகழேந்தி, உழுவலன்.

(புகழேந்தி யொரு சாமணையிலிருக்க, உழுவலன் கவரிகொண்டு வீச)

(நிலைமண்டில வாசிரியப்பா)

புகழேந்தி: உழுவ லன்பே! உலகுநற் றமக்கை
முழுவலன் பினைநீ முன்னுறக் காணுதற்
குற்ற சமய முனக்குவாய்த் ததுகாண!
பெற்றம பிரிந்த சிற்றிளங் கன்றுபோ
5 னெடுநா ளுற்ற துயரினை நீக்குவாய்!
கடுகிகா கணுய்! அரசியற் கணக்காக்
கொற்றவன் சுவாக்கியின துணமாந தூதுவர்
நற்றவத் தங்களை நாடியே நாளைப்
புறப்படு கின்றனர். அவருடன் போகில,
10. சிறப்புடன் சேரலாஞ் சீர்த்திசால் வளவன்
உறந்தைப பதிக்க ணுயர்மணி மாடமே

உழுவலன். அறநதிக ழகநிறை யன்புடைய பெரியீர்!
உரைததன சரியே ஆயினும, உம்மை
வரையப் பெறுது மயங்கியே நலியு
15. மவள்பா லியான்போ யாவதென் னவட்கு?
அன்றியும, அவளுறு நலனே யவனியின்
மின்றிகழ் யானுறு மேன்மையாம. ஆதலின்
அடிகாள்! தாமு மவணெழுந் தருளி
மிடியுறு மெமது மெலிவினை யகற்றிட
20, வேண்டினன் பெரிதே.

புகழேந்தி :

ஆண்டினி விளையோய் !
வளவனென் பான்மிக வருத்தங் கொண்டுளான
களவினி னவனவை கடந்துவந் துள்ளேன்.
மீண்டு மாண்டியான் புகுதல் வீணே
மணலினை முழுகி மறைந்து கிடக்கு
26. நுணலதன் வாயா லழியினைக் கொண்ட
கதையாம்

உழுவலன் .

கவின்புகழக் கடலிற் காணும்
மீதமாக களிறே! மகிதல மிதனி
னும்பால் வெறுப்புள வொருபெரு வேந்தரு
முளரோ? துங்கன் உலகிய லாகுந
30 திருவேறு தெளிவிய ராதலும வேறெனுந
திருமறை மொழியினைத திகழா மறைமொழி
யெனப்பல ரெண்ணிட விருபெரு செலவமுந்
தன்னெனக் கொண்ட தகுதிய னன்றோ?
நும்போ லுயர்கவி நோக்கினுண் மணியெனப
35 போற்றுமப் புரவலன், புலவீர்! நமக்கு
மாற்றல னுயது மாபெரும் வியப்பே!

(நேரிசை யாசிரியப்பா)

புகழேந்தி

வியப்பென்? ஒட்டக் கூத்தனின் விதவக்
காய்ச்சலே யென்பாற பாய்ச்சலாய்ப் புகுந்து
வளவனின் பகையை வளர்த்தது. வளவனும்
40 வெறுத்தெனைக் கோறல் விரும்பினன். நின்போல
வெறுத்திடா மணிவண் ணுதவியால வெளிக்கடற்
புகுந்தே சுவாக்கியாம் பொற்புறு தீவகத
திருந்தேன். ஆண்டினி யேகுத லமையா
விருந்தே யாகும.

உழுவலன் :

ஆமாம், விழலே!
45. ஆயினும், அடியேன் றமமை யாண்டு
புகுந்திடச் செய்யாது, போகேன். ' பொற்புடை
முடங்க லொன்று முகிழ்வெண் டாமரைத
திருவே யனையவென் சேயிழை தனக்கு

வரைவேன அதனால், வளவன மனக்கோ
50. ளரைசியான் மாறறி நம்மை யவளும்
வரவழைதத திடுவள். ஆகலின, மாண்பமை
புலவீர! தூதுவா போஙகா ஷியான்றரு
நறுககினைக் கொண்டே நடபபதற குரிய
வழியினை நாடுவீர!

புகழேந்தி: கழிபெருங் காதல்
55. வைததநல லினளு! மாற்றா சாபால்
வாழ்மடக கொடிகருக் கேழ்கிளா முடஙகற்
போக்குவ தெளிதல வெளிப்படிற் புகர்பள
வாக்குவ தாகும அன்றியும், சுவர்க்கியே
ஐயுற வேனும நேரிடின், அவனறன்
60 அன்பையு மிழநதியான் அன்புற லாகும
ஆகலின், நீசென் றவன புரிதல
வாகே யாகும்

உழுவலன்: வளாமதிப புலவீர!
தூதாதந நல்வ னியாரவன? தொல்புகழ்
முருகனே யன்றோ? அறிகுவன் பெரிதும்.
65. கழிபே ரன்புநற காட்சியு மறிவுந்
தெளிபே ருதவியாஞ் செயலு மருளு
முடையான். அனறியும், எனபா லொழிவிலா
தடைபே ரன்பா மகநட் புள்ளான்
முடஙகலோ வரசியன் முறையினை யொழிதந
70. குடுமபச செய்தியாம. அதனுற குவலய
நண்பனுரு சுவர்க்கியு நாடிட விருமபான்.
துஙகன, கறபகத தூலங்குநற் கொடி யாம்
பஙகமி லரசி யிருவாதம் பாவை
யுறவே யவாதம வாயிலாய், ஒணடொடி
75 பெற்றிட வெனவே பெருங்கண ணெழுத்துப
பொறிததே யனுப்பப போகுநன் முடங்கலாற்
குறிததே கொள்ளுந குணக்கே டின்றும்
ஆகலிற பெரியோய! அகததிய முடங்கற்
போகவே செய்வல்.

புகழேந்தி : புகரிலா பதியாய்!

80 விருப்பம் போல் வேண்டுவ செய்க;
ஆயினும், வெண்டா மரையா மரிவை
தாயினுஞ் சிறப்பாய்த் தழுவுநற் கூத்தன்
புகன்மொழிக் கெதிராய்ப் புகன்றுநற் றுங்களைத்
திருப்பிட வலியளோ?—

உழவலன் : தேவியா மரசிக்

85 குறைந்தேத மாற்றிடல், ஓ! எளி தன்றே!

புகழேந்தி : ஆமாம், சற்பக வல்லியா மரசி
யேமமி லென்பா லிரக்க மிகவுளாள்
அவளா லன்றோ வந்துஞ் சிறை யகன்றேன்!
தவள வாணகைத் தையலார் முயலின்,
90. ஆகா தனவு முளவோ?
மாகாதி பதியும் வாவென வருமே.

(கரந்துவர லெழினி தோன்ற)

(காட்சி முடிகிறது)

# ஐந்தாவது அங்கம்

## இரண்டாங் காட்சி

இடம் : சோழன் அரண்மனை யந்தப்புரம்.

காலம்: பிற்பகல்.

நடர் : குலோத்துங்கன், கற்பகவல்லி, செங்கமலம், மூக்கன.

(கற்பகவல்லி சார்மணையிற் சார்ந்திருக்க,
செஙகமலம் வெண்கவரி வீச)

(நிலைமண்டில வாசிரியப்பா)

கறபக (வருத்தத்துடன்)

நேரிழாய்! கமலா! நெடுநா ளாயின.
வாராதுழற் செய்தி மணற்கிணற் றிட்ட
கல்லே போன் றியாதுங் காண்கிலேன்!
பலலோ ரொற்றும்ப பலதிசை நாடியும
5 வல்லோ நகிலாவ வளரிட மறியார,
மடங்கினா. அந்தோ! மடக்கொடி யெவர்பான்
மடங்கியே நலிவான் மடிந்தனளோ கொல்லோ?
தாய்தந்தை யற்ற தளார்நடை யணங்கவள்,
நோயகொளப் பொறாத நொய்மையள். எந்தையா
10 ரறியி னவணிலை யவலமுற் றிடுவர்.
(வெண்டாமரையை மனக்கண்ணு னோக்கி)
வறியனோர் செய்வினை வளமுறச் செயல்போ
லுணும, உடையும், உயர்ந்தநற் கல்வியும்
மாணுறப புகட்டி மகளென வளர்த்த
வழுதியி னுழைப்பெலாம வறிதே காட்டி
15 லெரித்த நிலவும, இருங்கம ரதனிலே
கவிழ்ந்தநற் பாலும் மானக கயற்கணி!
ஒளித்தது தகவோ?
(கண்ணீர் சொரிய)

குலோத் (புகுந்து)

ஒண்டொடீ! என்னே!
துயர்க்கடல் புகுந்தனை! தோழியின் பிரிவது
மயற்கட லாக மாறிடல் வியப்பே!

20. கலைவன் பின்னே தலைவியைத் தொலைத்துத
தனித்துயா கொண்டாற் றுய்த்ததுயர் தனினு
நின் துயா பெரிதே !

கற்பக : (எழுந்தெதிர் கொண்டு)

நெடுமா லனையவெம
மன்னவ! அவபோ மகனையும, மகளையும
பின்னொடு நாளே பெட்புறக் காணலா
25 மென்றநறு களிபபாற் குறைவுறும, மென்றுயர்
குலமணி யாழியைக கொடுங்கடல் வீழ்ததே
பலமுறு மனங்கி ஞழதுயர் போன்றே,
பாழியங கடங்கோட பாரதிப! மாறு
விழ்துய ரன்றோ ?

(இருவருமோ ரிருக்கையி லமர)

குலோத் :
ஆமாம ; மெல்லியால !
30. இன்றுநம் மனையி லெழிலார மளுவ
நாட்டுத் தூதுவர், நடக்கு மரசியல
வினையாய் வநதவர், விளங்குவெண் டாமரை
நனையா டனககொரு நறுக்காநிருபங்
கொடுவந தனர்தா குலவிடு மவள்பின்
35. னுழுவலன் வரைந்தாம ஒண்மொழீ !
இதோகாண் !
மண்ணுடை முடங்கல்! மாதுவெண் டாமரை
கணணிடைப படாதவிக காலையிம் முடங்கலை
யெனசெய வெனவே யேங்குதெ னுள்ளம் !

கற்பக : (நறுக்கினை ஆவலோடு வாங்கி நோககி)
பொன்செய் நனசெய்ப புகழ்மிக வுடைய
40 நீாநாட டரசே! நீண்டுமே சுருண்ட
வூரகோ ளனையவிம முடஙகலி னொருபுறங்
காணுறு கண்ணிணழுத் தெனனுற் பன்முறை
காணப பெற்ற கவினுறு மெழுததாய்த
தோன்றிடு கின்றது !

(சிறிதுநே மெண்ணிப் பார்த்து)

தொன்மையாம வளப்பஞ

45 சேர்ந்திடு புனலுடை டரசே! செவ்வ
னறிந்தேன! சிறிது மையமே யில்லை
அரிவையென் டாமரை யதுவே! பிரிததுத்
தெரிவல்; அவடன செயதி பின்னவன,
உழுவல னெனபன வுபசரிப பேயாம.
50 வெணடா மரைக்குடன பிறந்தார் மேதினி
கண்டதே யின்று. காரிகை சூழசசியிற
கொண்டாள , இம்முறை

(நறுககினைப பிரித்து நோககி)

கொற்றவ! இதோகாண்!
விளிததிடு முறையினை! மேலும், இறுதியி
லளிததிடு கையொப் பவளபெயர் கொண்டு
55. விளங்கிடல் காணபாய்!

(நறுககினைப படித்து முடிதது)

வேநதே! கமலாா
முனனாக கூறிய முறையே, மாதவா
நன்னர்ப புகழினை நலமுற வோநதிய
புலவாயாற காதற் பொலிவுற் றுள்ளாம
புலவா முரணைப பூப னரணமனை
60 வாயிற புலவராய் வதிவதும, அன்று
ளாணுடை யோடவ ரருகணை தவாககே
மாணுடை யுழுவல னெனபபெயா மாறறிச
சோதர னெனவே யுரிமையுஞ சொலலி
யாதர வுடன்பணி விடையவாக காற்றி
65. வருவதும, மணிவணன் சூழசசியான் மறறவா
வெருவர அற்றிவண் வெளிபபுறப பட்டதும்,
மணிவண னவளபால் வளாபே ராசையாற
றுணிவுடன் சதிபல சூழ்நததும, தனது
காதற் கனியினைக் கணடே கொணாச
70 சாதற் கொதத தனிததுயா கொணடே
யாணுடை யுடனம தரண்மனை யகனறதுா,

சுவர்க்கியி னவையிற் றொல்புக ழேந்திவா
னவர்க்குங் கிட்டா வமிழ்தென வடமொழி
யகத்தே வழங்கு மரியநன் னூலாம்
75. நளன்வர லாற்றினை நற்றமிழ்ப் பாவாம்
வெண்பா வினிலே விளக்கிக் காப்பியக்
கண்போற் செய்து கவினரங் கேற்றிப்
பொலிவது மடைந்துளாள் மேலும், புலவர்
கிளிகெட மன்ன ! நீ கேடின் முடங்கல்
80 வுரைத்தே புலவரை யவளுடன் வரவழைத்
துறைந்தே வாழ வொருவழி யுணர்த்திட
வேண்டியே யுள்ளாள். கண்ணாடியின் நிருபம் !

(தங்கள் கையிற் கொடுக்க)

குலோத் : (நிருபத்தைப் படித்துவிட்டு)

கண்டினை யுறழ்மொழிக் காரிகாய ! உனது
திண்டிறற் றோழியின் செய்திகண் மிகவும்
85 வியத்தற் குரியன மேலும், அவளோ
ராண்மக னாக வவதரித் திடுநன்
மாண்பினைக் கொண்டுளாள் மற்றவள் விருப்ப
நிறைவே றற்கே நிருப மிரண்டு
புலவர் தமக்கும் பொருந்துநந் நண்பனுஞ்
90 சுவர்க்கிமன் னனுக்குந் தொல்புகழ்ச் சங்கமா
நம்மவை தனிலே நளவெண் பாவினைப்
பொம்மல் பலரினும் புலங்கொளச் செய்வான்
வருக ! என்றே வரைகுவ னின்றே

(சினமிக்கு)

கறைமிக வுடையான் போலும் ! காமுகன் !
95. மணிவண்ணன் ! நமது மாண்பமை யரண்மனைக்
கணியவர் பன்முறை கழறினர், அவன்செய்
தீங்கா மெனவே தெரிந்திலே னியாதுதேன் !
பூங்கா வினிலுறை புலிநிக ரவனை
யொறுத்தே யொழிப்பல் ! ஓ ! கோ ! வளவர்தம்.
100 அரண்மனை யவற்கோ ராடிடம் போலும் !

யாரது அங்கே!

மூக்கன் : (தோன்றி)

அடிமையன

குலோத் . மூக்கா!

நேரலை யமைச்சர் நிகரிலா வேலையர்
பாறசென றெமது பணிப்பென மணிவண
மாறசரி யமமிகு மடையனைச் சிறையகஞ்

105. சோததிடச செய்தே திரும்புவாய் நொடியே

மூக்கன் : பாரதிப ரேறே! பணிததவப் படியே

(செலவ)

குலோத் : (கறபகவலலியை நோககி)

கூரததிடு மதியாய்! கொண்டனின கவலை
போக்கிட வழியது பிறநதது அதனல்
சென்றமூம மதியாயத திகழ்முக மதியினைக

110 கனறவே வைததனை னெஞ்சங கலங்கச
செயதிடு செயலினைச சேயிழாய! சிதைததனை
யுயநதிடச செயவாய்!

கற்பக . ஒப்பிலா வெனது

கண்மணி யனையவென கட்டழகா! யான
பெண்மணிப் பேதையாட பிரிவா னுணாவிழந்

115 தயாநதுனை மறநதேன். அதுபிழை யெனினும,
அயர்விலா தென்பா லன்பினைக் கொணட
பணபார மன்னவ! பலநாட் பட்ட
பாடெலா மொழியப் பாடெலா நிறைநத
விளமரக் காவினுக கேகியே யாஙகுறு

120 மிளமாங குயிலோ டெதிரகூக கூவியும,
தென்ற லுகாநதும, தேமாம பூவின
மன்றன் மணநதும, மலலிகை பறிததும,
தோகைத மாட லோகையாய்க கணடும,
அனனமென் னடையினை யகனுறக் கொண்டும்

125. மனனவ! வருதும், வளாமதி யெனவே.

(கைபபறறி யழைத்துச செலல,
செங்கமலம பின்னடககை)

(காட்சி முடிகிறது)

# ஐந்தாவது அங்கம்

## மூன்றாங் காட்சி

இடம்: சோழன் கொலுக்கூடம்.

காலம்: முற்பகல்.

நடர்: புகழேந்தி, உழுவலன், குலோத்துங்கன், பராக்கிரம பாண்டியன், சந்திரன் சுவர்க்கி, கம்பர், ஒட்டக்கூத்தர், நகைமொழி நாவலன், வேலையர், படைத்தலைவர் முதலியோர்.

(குலோத்துங்கன் முதலியோர் கொலுவில் வீற்றிருக்க)

(நிலைமண்டில ஆசிரியப்பா)

குலோத்: புலவர்த மணியே! புகழாம் பூணையினி
னுலவிடு மொளியே! உம்பர்கட் கந்நாட்
பாற்கடற் கடைந்தே யமிழ்தினைப் பாத்த
மாற்கட் வுளினை மானவே செந்தமிழ்
5 மொழிக்கடற் கடைந்து முனிவரும் புலவருங்
களிக்கடற் புகுந்து கலந்து கூட்டுண்ண
நளபனுஞ் சுவர்க்கித னல்லவை யதனி
னுதவிய நளவெண் பாவெனு மொருபெரும்
புத்தமு தத்தினைப் புலவீர்! யாங்களு
10 முள்ளங் களிக்கவே யுண்டு புகரிலா
வானவர் போல வாழ்ந்திடும் வண்ணம்
மானவர் மணியே! வளர்சொற் பெருக்கால்
வழங்கிட வேண்டினன்.

புகழேந்தி: களங்கமி றுங்க!
விருப்பப் படியே விளக்குவல்
(உழுவலனை நோக்கி)
விழுமிய
15 கருப்பங் கட்டியே தெவிட்டாது காதுக்
கினித்திடு மொழியமை யெழிலா ருழுவல!
ஒன்பான் சுவையமை வெண்பா வேட்டினை
யெடுத்தே படித்திடு!

உழவலன் : என்னைக் கோயிலில்
விந்தையே போற்று மேன்மைசால் பெரியீர் !
20 செப்பிய படியே செய்வல.

(சிறப்புப் பாயிரச் செய்யுட்களைப்
படிக்க, புகழேந்தி சொற்பொழிவாற்ற)

குலோத் : புலவீர் !
செப்பிய கடவுட் சிறப்பிற் சமய
மாறுபா டின்றி வழுத்தியுந் தம்து
வேறுபா டான விசிட்டாத் வைதக்
கொள்கையை, "எங்கட் கிறை", யெனக் கூறி
25 விள்ளவே நடத்திய மேன்மையே மேன்மை.

(உழவலன் முதற் பதினொரு பாடல்களைப்
பாடப் புகழேந்தி சொற்பொழிவாற்ற)

பாண்டியன் : ஆ ! ஆ ! முன்னுரை யாக வமைந்தநற்
பாகாம் பதினொரு பாக்களும் பழைய
பாரதக் கதையினை நேருறச் சுருக்கி
விளக்கின பாரத வெண்பா வெனநூல்
30 கிளத்திடின, மீண்டுந் தமிழகங் கிளைத்திடும் !

கம்பர் : வெண்சீர் மிகுந்து வெள்ளாற் றொழுக்காய்க்
கணைபோற் சிறந்த கவினுடைப் பாக்களான்
நூலினை நடத்து நுட்பம் பெரிதும்
பாலின் சுவையாய்ச் செவியகம் பாய்வதான்
35 வெண்பா வினிலே மிகுபுக ழேந்திய
பண்புளா ரிவரே !

(உழவலன் நாடு, நகரச்சிறப்புக்களைத் தெரிவிக்கும் ஆறு
பாக்களையும் பாட, புகழேந்தி சொற்பொழிவாற்ற)

பாண்டியன் : பாரீர் ! நாட்டின்
வளத்தினைக் கேட்போர் மனத்தினைக் கொள்ளைகொ
டிறத்தினி லோவியந் தீட்டிய வாறுபோல
விளக்கிய வகையினை !

கம்பர் . மேலும், நகரச
40 சிறப்பது ஆடியிற சிலவகை யெழுததிற
பலவகைப பொருளைப் புலனுறப பதிததுச
செபபிய திறமை திபபிய முறையாம

குலோத் : செப்பிய துண்மை சிறறர சாகிய
அன்பின சுவர்ககித னகநகா முரணையும
45. மனபதை யுலகிற குடககெழு வானபிறை
போன்றே முரணிலாப் புதுநக ராகச
சானறது காணீர !

(உழுவலன சுயவரகாணட முடியவுள்ள பாடலகளைப
பாடப புகழேநதி சொறபொழி வாறற)

சுவர்ககி : (தங்கணை நோககி)
தணணளி வேநதே !
முகமதி யோடே குவளையு முகிழுதத
நகாநிறை காட்டி னயததினை தேராய !

கம்பா . 50 செமமனத் தானெனுஞ் சிறுவெண பாவினு
னனமனத தலைவனி னயமபுகு விததது்ம்,
நாறகுண நாறபடை யெனமிகு நலமுள
தலைவியைத் தலைவனி னெஞசகஞ் சாததலுங
கலைநிறை வனமையைக காடடு வனவே !

பாண்டிய 55 இவவள வினிலே யென்றெடுத திளவ
லொவவொரு நொடியு மோதிம வரவினை
யெதிாபாாத தமைதனை யெழிலாய்க குறிததது
புதிதாய் வியப்பினைப புகட்டுவ தாகும.

குலோத் : குலமுனி கொற்றத தனியாழ்க குணததினைப
60 பலபடி யாகப பகாவதை விடுதது
நெற்றித தனிகக ணொருபபை யவிககும
பெறறிய தெனிற பெருமையே பெருமை !

நகைமோ அள்ளிக கொளலா யடையத திரண்ட
கொள்ளியும விலககொணுக் கூரிரு ளென்ற

65  மொழிசதிற னென்றே மூவுத குமபெறாம்.

வேலையர்  மொழிககடற குரிதத முதனமையிர! செலவன்
பைஙகிளி யோடே பரநதபா லுணரா
செங்கோல் வளாச்சியைத் திறமுற வுரைதத
நயமே நயமாம! நற்கொஙகை யிளநீ
70. ரெனுநற் பாவி னேறறமெவ வுலகினுங
காணுதற கரிதாம்! கதிரவன் குடபாற்
பேணியே மறைநத பெற்றியைக் கூத்தன
காணிருட் படாததினை கவிநுற வாங்கி
யாரணம் பாட வாடிக் குடவரை
75 யொருமுக வெழினியி லோடியொ ளித்தாய்ப்
புகன்றுபின் மாலையின் புறபபா டதனைமன்
மகன்புறப பாடென மலலிகைச் சங்கொடு
கருபபு விலலிதன் காவலு மமைததுச்
செலுததிய சிறப்பே செபபொணுச் சிறபபாம.

கூத்தர்  80. ஆயினும, மலலிகை யடிபபுறம விடுத்து
மேயின நுனிப்புற மெல்லென வூதும
வண்டினைச சங்கின் மறுபுறம வாய்வைத
தொண்டிற லோடு மூதா மாநதாக்
கொபபுமை கூற லுலகிய லுணராத்
85  தபபித மனறோ?

புகழேந்தி :  தபபித மேயோ?
பலலெயி றென்ற பழநதிரு மொழியி
லெலலியம போதிருஞ சிறைவண டெமது
பல்புகழ்ப பெருமான் குணமதைப பாடி
மல்லிகை வெணசங கூது மதிலுடை
90  யரங்க மென்ற வதுவென்? தவறோ?

நகைமோ  பெரியார் மொழியினைத தவறெனப பேசுதற்
பெரிதுந் தவறும. பேதமை மிகக
நாலறி வேயுள நயமில வண்டினம்
வாலறி வதனையும வாய்த்தகட் குடியா

95 விழநதே யடிநனி யென்பதை யறியா
துழந்தன போலும !

கம்பர் : ஓ ! கேள் ! நாவலன
ஆராய் வின்றே யருமையும பெருமையு
நேராய்க கொண்டது ! நேர்ததி !! நோத்தி !!!

பாண்டியன் : இன்னென் றறிமின ! எதிழை யவளுங்
100. கன்னலன் றுயராற கருத்தழிந தயலே
வுதியுந் தோழிகள வார்ததைகட் கெதிராய்
மதிதன் சுடர்பட வாய்த்தகற கொபபுளங
கொண்ட குளிர்வா னென்னுங கொள்கையை!

கூத்தா : (புனசிரிபபுடன)
கண்டனம ! ஆயின், கணடிடு கொபபுளங
105. கொணடிடு சீயும, நீருங கண்டிலேம !

உழுவலன் : கண்டனர், பலரே ! நாமுங் கருததுடன
நோககிடின், வானக நினறு நுடபமாம
பீனின முதிாதலும, விண்பனி வீசலுங்
காணலாம

நகைமோ : காணுவா, கருததிலாா பலரும.

சுவாக்கி : 110. கறறவா குழுவே ! கருதுமிந நூலி
னறற மியமபநத நாவுபல காணு !
பொற்றொடி சுயவர மண்டபம புகுநத
சிததிர மெவருந தேடுசித திரமே.
சேடியர் புகழ்நத தோவேந தாககெலாம
115. பொனனி யமுதப புதுககொழுந் தென்று
மன்னவ ! நினபால வைததபே ரனபான
முனனாக கூறிய முறைமையும, பினனா
வழுதிநற சேரனை வைததநல் லொழுஙகும
பழுதிலாத் தமிழகப பறறின் மிகுதியாம்.

குலோத்: 120 ஆமாம, புலவாத மருமையும் பெருமையு
மளவிடற் கரியன,

(ஒட்டக்கூத்தரை நோக்கி)

அருந்தமிழ் தெரிக்க
வாரிய! நாமிங் காவல கூறு
திருத்தவென்? தமிழ்த்தா யென்னில் காவல
வருந்தியே யுடலை மாசோள பெற்றிய
135 பெற்றன மக்களீர் செற்றங் கொள்ளுதல
தமிழ்த்தா யவட்குத் தாங்கொணாத் தீங்காம்
ஆகலிற் பெரியீர்! அன்புடை யீராய்
மாசுமே போற்ற வளர்மதி போன்று
நண்பதைப் பெருக்கி நற்கலை மடந்தை
130 மன்பதை மகதீத வளர்ந்திடப் பொருந்துவீர்!

கூத்தர்: மாணவ மணியே! வழுத்திய நுண்மை.
ஆணவ குணத்தாற் சிறிதுநா னயர்த்தனன்.
புலமையில வியாழனை போன்றவிப புலவரைப்
பெரிதும் வருத்தினன்.

(புகழேந்தியை நோக்கி)

பெரியீர்! நும்மையான்
135. பாண்டிய னவையினிற பார்த்தவவ் வேளைப
பிசகது! பொறுப்பீர்! பெருஞ்சொலாற்
பொழிந்த
நளவெண் பாவெனு நன்மழை யதனால்
வறண்டவென் னெஞ்சம் புரண்டது புனலால்
இருசெவி குளிர வெடுத்துநீ ரியம்பிய
140. நளவெண் பாவாம நலலமிழ் ததற்கு
நான்செய் கைம்மா றியாதா நவிலவீர்!

(புகழேந்தியின வலக்கையிணை
இருகைகளாலும் பற்றி நண்பு பாராட்ட,)

குலோத்: நானசெய் நற்றவ மின்றே பலித்தது!

கம்பர்: ஊன்கண கட்குண மின்றே யுகந்தது!

பாண்டியன்: தமிழத் தாயின்றே தணிந்தனள் மனக்குறை!

சுவர்க்கி. 145 தமிழக மின்றே தலைசிறந் ததுகாண!

நகைமோர். இருளு மொளியு மின்றே கலந்தது!

குலோத்: அருளுந் தெருளு மனையநற புலவீர்!
நாளை மிகுதியா நளவெண் ணமுதினை
யசய்வோம். இன்றோ வருமபக லுச்சியாய்க
150. காய்பசி மிகுநதது. கலைப்போம கொலுவினை

புகழேந்தி: ஆய்வினை மன்னவ! அவ்வணம புரிவோம்
நோய்பசி நீங்கி நண்பதி சிறக்கவே.

(கொலுக கலைய)

(காட்சி முடிகிறது)

# ஐந்தாவது அங்கம்

## நான்காங் காட்சி

**இடம்:** சோழன் அரண்மனைப் பூஞ்சோலை

**காலம்:** மாலை.

**நடர்:** புகழேந்தி, உழுவலன், வெண்டாமரை, குலோத்துங்கன், கற்பகவல்லி, ஒட்டக்கூத்தர், பராக்கிரமபாண்டியன், சந்திரன்சுவர்க்கி, நகைமொழிநாவலன்.

(புகழேந்தியும், உழுவலனும் சோலையினூடே புகுந்து உலாவ)

(நிலைமண்டில ஆசிரியப்பா)

புகழேந்தி. ஒப்பிலா நண்பா! உழுவல்! நீ முன்
செப்பிய படியே சேர்ந்தனம், கண்டு
வெண்டா மரையினைக் கண்டனை கொல்லோ!
துங்கனின் மனத்தினைத் துணிவுற மாற்றிய
5. திங்களன் முகத்தினு டிறமையே திறமை
துங்க னினக்குத் தொடர்ச்சியா மன்பினைப்
பங்க மிலாவகை பாலிக்கின் றனன்.
என்னே! இளைஞரா நட்பா ருள்ள
மின்னோ தன்மை! என்மன நின்னைக்
10 கண்டது முதலே கழிபே ரன்பாங்
கொண்ட னிறைந்து குழுறலாம் விருப்பம்
மிகுந்தே யருண்மழை விடாதே நின்பாற்
புகுந்தே பொழிந்திடு கின்றது! புவியில்
நீயே யெற்கு நெருங்கிய சுற்றமாம்.
15. தாயுந் தந்தையுந் தமயனுந் தம்பியுந்
தமக்கையுந் தங்கையுந் தனைவிட் டகலா
மனையு மகனு மகளு மாயினை!
இனியிப் பிறப்பி லெகவே யுனையான்
விட்டே வாழ்த லொட்டா வொன்றும்.
20 என்னே! உன்பா லிருக்குந் தன்மை!

உழவலன் : தனனே ரில்லாத தனிப்புகழ் மிக்க
புலவர் மணியே! புகுன்ற யானு
நும்மைக் கண்ட நொடிமுதல் விலக்கொணு
மெய்ம்மை யன்பாம் விளங்குநற் கயிற்றுற்
25. பிணிக்கப் பட்டுளேன பேதையென் றமக்கையைக்
கண்டேன் அவளும நும்பாற் கணக்கிற்
கனிந்திட வொண்ணுக் கழிபே ரன்பா
லுடைமையே கனவிலு நனவிலு முன்னிச
செம்மையா காதல் கொண்டு சிறந்துளாள்.
30 அன்னவ டன்னை நீ ரன்புடன மணந்தே
முன்னரெங் குறையினை முடித்திட வேண்டினேன.

புகழேந்தி அமிழ்தினை யொக்குந் தமிழ்மொழி பகரு
முழுவல!, உனது தங்கையின் வேண்டுகோட
செழுமிய மொழிகள் கிடடுத லின்றி,
35 விழுமிய நின்மொழி வீணே யன்றே?

உழவலன் ஆமாம், வீணே. அனுப்புவ லவளை
ஏய்ய திலலா விளங்கொடி யவளைக
காப்பது நுங்கடன கழிபே ரன்பாங
சட்டெ! நொடியினி லவணின் காட்சி
40. கண்டு வணங்குவான் செய்குவல, காணபீர்!
(செலலல)

புகழேந்தி : (தனக்குள)
கண்டே யனைய தண்டமிழ் மொழிகளால்,
இவ்வினை ஞனனை வவ்வினன பெரிதும!
அனறியும, இவனற னரியநற றமக்கை
வெண்டா மரையினைப் பண்டே யறிகுவன்.
45. அறிவுங் கலவியு மழகுஞ் செறிந்த
தெரிவையே யாவள் ஆயினும், பெரிதும
வறியனு மென்னை மணக்க விசைவதே
வியப்புடன் ஐயமாய் விளங்கிட லாயது.

வேண்டா : (தோன்றி)
மேன்மைசா லன்பே! மேதினி யதனில்,

50. வான்மை சால சுற்றமாய் நின்னை மதித்தியான்
திருவடி தொழுதனன்

(மண்டியிட்டு வணங்க)

புகழேந்தி : (தூக்கி நிறுத்தி)

செந்தா மரையாட்
பெருவடி வுடைய பேரெழி லணங்கே!
உழுவலன் யாரவன்? உமையோ? உனையவன்
பழுதிலா துருவின் முழுவது மொத்துளான்!

வேண்டா : (நாணத்துடன்)

55 உழுவல வெனதுடற பிறப்பே யாவன்.
யானே யவனும அவனே யானும.
யானுறு மின்ப துன்ப மவனுறு
மின்ப துன்பமாம இணையிலா வெனதுயி
ரின்ப வெள்ளமே!—

(நாண மீதூரத் தலைகுனிந்து நிலத்தைப்
பெருவிரலாற் கிளறி நிற்க)

புகழேந்தி . (வலக்கையினைப்பற்றி)

ஏந்திழாய்! உனது
60 விருப்ப முழுவலன் விளம்பமுன் னறிந்தேன்
கருப்பங் கட்டியே யனையநற் காரிகாய்!
அரச னரசிமுன் நமதரும் காதலை

பரசியே பகருவம், வாராய்; பைந்தொடீ!

குலோத் : (கற்பகவல்லியோடு தோன்றி)

பிரசுநான் முகனும பாரதி வாணியும
65. புரையவே நீங்கள் பொலிக! நீடூழி!
(வேண்டாமரை நாணத்தால் சிறிது பின்னிட்டு விலக)

புகழேந்தி இம்மையி லெதிர்ப்படு மேத்தரு தெய்வச்
செம்மைசால செல்வீர்! சேயிழை யிவளும
யானு மில்லற நற்சக டத்தினைப்
பூணுமா றுமது பொன்மொழி விழைந்தோம

கற்பக : (வெண்டாமரையை நோக்கி)

70 நாணமென ? நங்காய ! நாமே யுனனைப
பேணாத லுற்று பெற்றோ. வாராய் !
(வலக்கையிவனைப பற்றிக்கொணடு, புகழேந்தியை நோக்கி)

தமிழன்னை பெற்ற தமிழா சிரிய !
இமிழ்கடன் ஞால மேத்துநல் லுழுவ
லன்புள காதலி யாமிவ டனனை
75. மணபதை யுலகினில வாழவிலுந தாழ்விலு
மொருபடித தாய்க்கொண் டேழியோ நீழி
பெருமதி ஞாயிறு போலப பெருகவே !—
(வலக்கைமையிற சோகக)

குலோத் வாழக ! வாழ்க ! வாழ்க ! நீ டூழி !

கூத்தர் : (தோனறி)

வாழ்க ! வாழ்க ! வாணியுஞ சிறககவே !

பாண்டியன் . (தோனறி)

80 தண்டமிழ்ப புலவீர ! சாறறரும பணபுள
வெணடா மரையு டன விளஙகுக வூழி !

சுவர்க்கி : (தோனறி)

மலரும் மணமும மானவே புலவீர !
நிலவிட வேணடினன, நேரிழை யுடனே

நகைமோ : (தோனறி)

நேரிழையுடனே நேருநல லாகிபோ
85 லூழிக காலமிவ வொளளிழை யுடனே
வாழிநீ டேழி ! வாழி ! வா ழியவே !

புகழேந்தி . மனபதை களிககக கண்டே மகிழு
மன்புடைத தஙக ! அகமிக மகிழ்வுறு
மிவ்வே ளையினில, இமமண முதலாய
90. நின்றே நடததிய நிகரிலா வுழுவல

னின்றே போயதென னிதயத துற்ற
புண்போ ஒயது. ஆசற்ற புரவல!
பண்போற கிளவிகள் பகருநல் லுழவல
னென்பாற் சோந்தே யின்னுரை வழங்கக்
95 கண்பார்த தருள்செய காவல ரேறே!

குலோத (முறுவலுடன்)

அளபபரு மறத்தின றிறத்தான் விளைந்த
பொற்கதிர் நெற்கதி ராயபோ ரடித்துப்
புலவர்க் களித்த பொறகளத் தூர்வரு
புலவர்த மணியே! பொருந்திறம மருங்கே
100. யுழவலன் புடைய வோநகுவெண் டாமரை
யிழுதினை யிருந்தியு மின்னுமோ ருழவல
னுமக்கேன்?

கற்பக: ஒப்பிலா வொண்டமிழ்ப புலவீர்!
வெண்டா மரையே விடேனென வுமமைக்
கண்டே கடிமணங் கொண்டிடட் வேண்டி
105. யுழவல னுருவோ டும்மை யீங்கே
பழுதிலா தழைததுப பலருங காண
மணமது கொண்ட மறையது தெளிவீர்!

புகழேந்தி: (வெண்டாமரையை வியப்புடன் நோக்கி)

ஓ! கோ! இடையூ றொன்றையும் பொருட்செயா
உழுவலன் புள்ளாள உழுவல னுருத
110. றகவே! தகவே

குலோத். !! வெண்டா மரையினி
றகவே கல்வித தனிபபொருள சேரலே!!!

வெண்டா: (தங்கனை நோக்கி)

எளியார் வாழ்வே வலியார்க் குறுதி
யென்றே யெண்ணி யெம்போன் றெளியார்க்
குதவு மொருபெரு முயாவுடை யரசே!
115. இதமுறு மெமைபபோ லேந்திழை கமலாட்
காதலன் மணிவணன் கடுஞ்சிறை நீங்கிப்

போதல் பெற்றப புகழ்மிகு மவளுடன்
மணமக ளாக மருவியே வாழுங்
குணமதை வரமாக் கொடுத்திட வேண்டினன்.

குலோத் : 120 இன்னு செய்தாா கினியவே செய்யு
நன்னயப பாவாய் ! நலகினேன். மேலும,
சிறையுள பலர்க்குரு செய்தனன், சிறைவிடு
தலையே தரணியிற் றமிழபபுகழ் சிறக்கவே

(கரந்தவர வெழினி சாண)

(காட்சி முடிகிறது)

(ஐந்தாவது அங்கம் முற்றும்)

நூன் முற்றம்



# பாடியுள்ள செய்யுட்களின் தொகை

## பாடியுள்ள செய்யுட்களின் தொகை

### முதலங்கம்.

காட்சி

| | | |
|---|---|---|
| 1. | நேரிசை வெண்பா 3-க்கு அடி | 12 |
| | ஒத்தாழிசைக் கலிபபா 1-க்கு அடி | 18 |
| | நிலைமண்டில வாசிரியப்பா 1-ககு அடி | 65 |
| | ஆசிரிய விருததம் 2-ககு அடி | 8 |
| 2. | கலிததாழிசைகள 6-க்கு அடி | 24 |
| | நேரிசை யாசிரியப்பா 1-ககு அடி | 61 |
| 3 | கலித்தாழிசைகள் 3-ககு அடி | 9 |
| | ஆசிரிய விருததம 4-ககு அடி | 16 |
| | நிலைமணடிலவாசிரியபபா 1-க்கு அடி. | 124 |
| 4 | நிலைமணடிலவாசிரியப்பா 1-ககு அடி | 177 |
| | கலிவெண்பா 1-ககு அடி | 118 |
| | ஆகப்பாக்கள 24-ககு அடி | 632 |

### இரண்டாவதங்கம்

காட்சி

| | | |
|---|---|---|
| 1 | நேரிசை யாசிரியபபா 1-ககு அடி | 132 |
| 2 | நேரிசை வெணபா 1-க்கு அடி | 4 |
| | நிலைமணடிலவாசிரியபபா 1-க்கு அடி | 255 |
| 3 | நேரிசை யாசிரியபபா 1-ககு அடி | 168 |
| 4. | நிலைமணடிலவாசிரியப்பா 1-க்கு அடி | 98 |
| 5. | நேரிசை யாசிரியபபா 7-க்கு அடி | 181 |
| | ஆகப்பாக்கள் 12-க்கு அடி | 838 |

### மூன்றாவதங்கம்

காட்சி

| | | |
|---|---|---|
| 1. | நிலைமண்டிலவாசிரியபபா 1-க்கு அடி | 80 |
| | குறள்வெண் செந்துறை 5-ககு அடி | 10 |
| | கலிததுறை 2-ககு அடி | 8 |

| | | |
|---|---|---|
| 2 | நேரிசை யாசிரியப்பா 1-க்கு அடி | 59 |
| | நிலைமண்டிலவாசிரியப்பா 1-க்கு அடி | 152 |
| | கலிவிருத்தம 2-ககு அடி | 8 |
| | கலிததுறை 6-க்கு அடி | 24 |
| 3. | நிலைமண்டிலவாசிரியபபா 1-ககு அடி | 107 |
| 4. | நிலைமண்டிலவாசிரியப்பா 1-க்கு அடி | 168 |
| | குறள் வெண்செந்துறை 2-க்கு அடி | 4 |
| | கலிததுறை 2-ககு அடி | 8 |
| | கலித்தாழிசை 3-ககு அடி | 12 |
| 5. | நிலைமண்டிலவாசிரியப்பா 1-க்கு அடி | 111 |
| | ஆகபபாககள் 28-க்கு அடிகள | 751 |

## நான்காவதங்கம்

| காட்சி | | |
|---|---|---|
| 1 | நிலைமணடில வாசிரியபபா 1-க்கு அடி | 209 |
| 2. | நிலைமண்டில வாசிரியபபா 1-ககு அடி | 92 |
| 3 | நிலைமணடிலு வாசிரியப்பா 1-ககு அடி | 97 |
| 4. | நிலைமண்டில வாசிரிப்பா 1-க்கு அடி | 68 |
| | குறள்வெண் செநதுறை 7-க்கு அடி | 14 |
| 5. | நிலைமண்டில வாசிரியப்பா 1-க்கு அடி | 65 |
| | ஆகப பாக்கள் 12-க்கு அடிகள | 545 |

## ஐந்தாவதங்கம்

| காட்சி | | |
|---|---|---|
| 1. | நிலைமண்டில வாசியப்பா 1-ககு அடி | 36 |
| | நேரிசையாசிரியபபா 1-க்கு அடி | 55 |
| 2 | நிலை மணடில வாசிரியபபா 1-க்கு அடி | 125 |
| 3. | நிலை மண்டில வாசிரியபபா 1-க்கு அடி | 152 |
| 4 | நிலை மண்டில வாசிரியபபா 1-க்கு அடி | 123 |
| | ஆகபபாக்கள 5-ககு அடிகள் | 491 |

| | |
|---|---|
| 1-வது அங்கம் பாக்கள் 24-ககு அடிகள | 632 |
| 2-வது அங்கம் பாக்கள் 12-ககு அடிகள | 838 |
| 3-வது அங்கம் பாக்கள 28-க்கு அடிகள் | 751 |
| 4-வது அங்கம் பாக்கள் 12-க்கு அடிகள | 545 |
| 5-வது அங்கம் பாக்கள் 5-க்கு அடிகள் | 491 |
| ஆகப பாக்கள 81-க்கு அடிகள | 3257 |

